ஸ்ரீ [redacted]

ஜகத்குரு 231

# ஸ்ரீ சங்கரபகவத்பாதர்

## தமிழ் நாடகம் 231

"சிவாஷ்டபதி, ராமாஷ்டபதி" பிரசுரகர்த்தா

ஜகத்குரு ஸேவாதுரந்தர

பிர்ம்மஸ்ரீ நா. ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள்

அவர்கள் இயற்றியுள்ள ஸ்ரீசங்கரதிக்விஜய நாடகத்தை

ஆதாரமாகக்கொண்டு சுருக்கி,

தேவீதாஸன்

**S. ஸந்தானராமன்**

இயற்றியது.

---

முதற்பதிப்பு

---

பாரதி அச்சுக்கூடம், மன்னார்குடி.

**1937.**



விலை 8 அணா

ஸ்ரீ ஜகத்குரு

ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி

**ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் அவர்கள்**

சரண கமலங்களில் ஸமர்ப்பிக்கப்பட்டது.

# விக்ஞாபனம்.

231

செந்தமிழ் நாட்டு மக்காள்!

நம் நாட்டில் நவீன முறைகளில் அநேக புராண இதிகாஸ நாடகங்கள் வெளியாகி நடிக்கப்பட்டும் பேசும் படக்காக்ஷி மூலம் காட்டப்பட்டும் அதன் மூலமாக தமிழ் மக்களனைவரும் கண்டு களித்து வருகின்றனர். ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ ஆதி சங்கர பகவத் பாதாசாரியாளுடைய திவ்விய சரித்திரத்தை அனைவரும் வெகு எளிதில் தெரிந்துகொண்டு அன்னவர்பால் பக்தியும் அடைய வேண்டி நாடக ரூபமாக நவீன முறையில் தயாரிக்க எண்ணின என்னை என் தந்தை உத்ஸாகப்படுத்தியதால், ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்வாமிகளுடைய ஆக்ஞையின்படி சங்கர ஜயந்தி உத்ஸவ கொண்டாட்டத்திற்காக காலக்ஷேபமாக செய்வதற்கு அரும்பாடு பட்டு சென்ற பதினைந்து வருஷங்களாக பல பாஷைகளிலிருந்தும், தஞ்சாவூர் ஸரஸ்வதி மஹால் லைப்ரரியிலிருந்தும் பல கிரந்தங்களை ஆதாரமாகக்கொண்டு என் தந்தை பிரம்மஸ்ரீ நா. ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் தயாரித்து எழுதி அச்சிட வைத்திருக்கும் "சங்கர திக்விஜய நாடகம்" கைக் காப்பியை ஆதாரமாகக்கொண்டு அதிலுள்ள பல பகுதிகளை எளிய தமிழ் நடையில் சுருக்கமாக 3 மணி நேரத்தில் நடிக்குமாறு இயற்றி, என் இஷ்ட தேவதையான பராதேவதையின் ஆக்ஞைப்படி, என் தந்தையின் அனுமதியின் பேரில், இப்புத்தகத்தை அச்சிட்டு வெளியிட்டிருக்கிறேன். எனக்குப் போதிய ஆராய்ச்சியின்மையாலும், முதிர்ந்த படிப்பின்மையாலும், என் சிற்றறிவுக்குத் தகுந்தபடி எழுதிய இதில் பல குற்றங் குறைகள் இருக்கலாம். ஆயினும் இதுவே எனது முதல் முயற்சியானதாலும், பெரியோர்களிடமுள்ள பக்தி காரணமாகத் தொண்டு இயற்றும் அவா எழுச்சியால் எழுதிய இதை ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸ்வாமிகள் அவர்கள் திவ்விய சரண கமலங்களில் சமர்ப்பிக்கிறேன். இதை சகலரும் அங்கீகரித்து இதுபோல் பல நாடகங்களை எழுதுமாறு உத்ஸாக மளிக்க தாழ்மையுடன் வேண்டிக்கொள்ளுகிறேன்.

"ஸ்ரீ தேவீபவனம்"
செட்டிசத்திரம்
11—3—37

இங்ஙனம் தேவீ தாஸன்,
S. ஸந்தான ராமன்.

# நாடக பாத்திரங்கள்.

ஸ்ரீ பரமசிவன்
ஸ்ரீ விச்வேச்வரர்
ஸ்ரீ பிரும்ம தேவர்
ஸ்ரீ வ்யாஸர்
ஸ்ரீ ஜைமினி
தேவேந்திரன்
ப்ருங்கி மஹரிஷி
நந்தி தேவர்
ஸ்ரீ சங்கரபகவத் பாதர்
ஸுதன்வா [பாடலீபுர அரசன். இந்திரனவதாரம்]
மதியூகி [ஸுதன்வா மந்திரி]
அமரகன் [அஸ்ஸாம் தேசத்து மன்னர்]
ஸுவிசாரர் [ஷை தேசத்து மந்திரி]
ராஜஸேனன் [காஞ்சீ நகர மன்னர்]
கோவிந்த பகவத் பாதர் [சங்கரரின் குரு]
பட்ட பாதர் [ஷண்முகாவதாரம்]
ப்ரபாகரர் [பட்டபாதர் சிஷ்யர்]
மண்டனமிச்ரர் [ஸுரேச்வரர்- ப்ரும்மா அவதாரம்]
மாதவமிச்ரன் [மண்டனர் சீடன்]
சிவகுரு கனபாடிகள் [சங்கரர் தகப்பனர்]
ஸுபுத்தி [சிவகுருவின் சீடன்]
வித்யாதரர் [ஒரு பௌத்த குரு]
அமரஸிம்மன்
வேத நிக்ரஹன் } [பௌத்த பண்டிதர்கள்]
ஜீமூதன்
நீலகண்ட சாஸ்திரிகள் [ஒரு சாஸ்திரிகள்]
அனந்தராமன் [ஒரு சாஸ்திரிகள்]
பத்ம பாதர்
ஆனந்தகிரி } [சங்கரரின் சீடர்கள்]
ஸ்ரீசரணன்
துன்மதி [ஒரு சேவகன்]
ஸ்ரீ பார்வதி
ஆர்யாம்பாள் [சிவகுருவின் மனைவி, சங்கரர் தாயார்]
ஸரஸவாணி [மண்டனமிச்ரர் மனைவி, ஸரஸ்வதி அவதாரம்]
மதன மஞ்சரி [அஸ்ஸாம் தேசத்து பட்டமகிஷி]
மீனாக்ஷி [நீலகண்ட சாஸ்திரிகள் மனைவி]
காமாக்ஷி [ஒரு ப்ராம்மண ஸ்திரீ]
கமலா [மதன மஞ்சரி தோழி]

ஒரு ஜோஸ்யர், ஒரு சண்டாளன், ஒரு வைத்தியர், அந்தணர்கள், சிஷ்யர்கள் முதலானோர்.

# குறிப்பு.

இந்நாடகத்தை நடிப்பதற்கு நாடக பாத்திரங்கள் ஏராள மாக இருப்பதாகப் புலப்படலாம். சிலருக்கு அதிக வேலையும் சிலருக்கு சிறிதே வேலையும் இருக்கிறது. நாடகத்தை நடிக்க ஏராள மாக நடிகர்களை ஒன்று சேர்ப்பது கொஞ்சம் கஷ்டமானதுபற்றி அடியில்கண்டபடி சில நடிகர் பல வேடங்களை எடுத்துக்கொண் டால் எல்லா நடிகர்களுக்கும் சமமாக பாகம் ஏற்படுவதுடன் கீழ்க்கண்டபடி செய்து கொண்டால் இருபதே பேர்கள்போது மானதாகும்.

1. ஸ்ரீ பரமசிவன், ஸ்ரீ விச்வேச்வரர்
2. ஸ்ரீ பிரும்மதேவர், மண்டனமிச்ரர்
3 தேவேந்திரன், ஸுதன்வா, அமரகன், ராஜஸேனன்
4 கோவிந்த பகவத்பாதர், ஸ்ரீவ்யாஸர், வயோதிகப்ராமணன் 1
5 ஸ்ரீப்ருங்கி மஹரிஷி, வித்யாதரர், ஸ்ரீஜைமினி, வைத்தியர்
6 நந்தி தேவர், சிவகுரு கனபாடிகள் ப்ராம்மணர் 2.
7 பட்டபாதர், ப்ராம்மணர் 3.
8 அமரஸிம்மன், ப்ரபாகரர்
9 மாதவ மிச்ரன், சண்டாளன், ஸுமதி
10 ஸுபுத்தி
11 ஸ்ரீ சரணன், பால சங்கரர். [இரண்டாம் அங்கம் முடிய]
12 ஸ்ரீ சங்கர பகவத் பாதர்
13 வேத நிக்ரஹன், நீலகண்ட சாஸ்திரிகள், ப்ராம்மணர் 4
14 ஜீமூதன், அனந்தராமன், ப்ரும்மணர் 5.
15 பத்மபாதர்
16 ஆனந்தகிரி
17 ஆர்யாம்பாள்
18 பார்வதி, காமாக்ஷி, கமலா
19 மீனாக்ஷி, ஸரஸவாணி
20 மதன மஞ்சரி
21 மதியூகி, ஸுவிசாரர், ஜோஸ்யர்

# அனுபந்தம்

---

முதல் கோரஸ் — பாட்டு

ராகம் ஹிந்துஸ்தான் பியாக் — தாளம் ஆதி

வந்தே ஸத்குரும் — ஜய வந்தே ஸத்குரும் (வந்தே)
ஜய ஜய ஸத்குரு ஜய ஜய சங்கர
ஜய ஜய ஜகத்குரு ஜய ஜய ஜய ஜய (வந்தே)
காலடியிலே — சீல சிவகுருவின்
பாலனாகித்தவ கோலம் கொண்டவா (வந்தே)

அங்கம் 1. காட்சி 5. பக்கம் 18 காமாக்ஷி மீனாக்ஷி பாடுகின்றனர்.

ராகம் நீலாம்பரி தாளம் மிச்ரஏகம்

சீலமிகு சிவகுருவாம் அந்தணர் செய் அருந்தவத்தால்
பாலகனாய் அவதரித்த பாலகா நீ நித்திரை போ
குணவதியாம் ஆர்யாம்பாள் கூறவொணாக்குறை தீர்த்து
குலவிளக்காய் வந்துதித்த குணநிதியே நித்திரை போ

அங்கம் 2 காட்சி 2 பக்கம் 23 சங்கரர் பாடுகிறார்.

சிதம்பரம் போகாமல் — என்ற மெட்டு.

சற்குருவை தேடி அடையவேணும் நான்
சன்யாஸம் பெற்றுமே உய்யவேணும் அம்மா — சற்குரு
போகமும் லோபமும் பாபமும் இங்கே
யோகமும் ஞானமும் ஆனந்தம் அங்கே — சற்குரு
தடையொன்று சொல்லாமல் ஆசியளித்தெனக்கு
விடையளிக்கவேண்டும் தற்பொழுதே அம்மா — சற்குரு

அங்கம் 3 காட்சி 3 பக்கம் 39 சங்கரர் பாடிக்கொண்டே வருகிறார்

ராகம் : ஸிந்து காபி — தாளம் : ச. திருபுடை.

யோகர தோவா போகர தோவா
ஸங்கரதோவா ஸங்கவிஹீன :
யஸ்யப்ரம்ஹணி ரமதே சித்தம்
நந்ததி நந்ததி நந்தத்யேவ

அங்கம் 4 காட்சி 1 பக்கம் 48

ராகம் கமாஸ் — தாளம் ஆதி

பல்லவி

சன்யாஸ தீக்ஷை பெறல் அவசியமே
சாச்வதமான ஓர் ஸத்கதியை அளிக்கும் — சன்

அனுபல்லவி

முக்தி அடைவதற்கு கர்மா மட்டும் போதாதே
முக்தி அளித்திடும் அந்த முதல்வன் அருள் வேண்டாமோ
— சன்

சரணம்

போதித்தவன் மொழியைகேட்டு ஆசையைவிட்டு
வேதத்தின் பொருள் உணர்ந்து மண் பெண் பொன்னுசை
விட்டு — சன்

## அங்கம். 5. காட்சி. 5. பக்கம் 63.

மதன மஞ்சரியும், அமரக அரசனும் ஒவ்வொரு அடி பாடுகிருர்கள்.
அச்வத்தம்மாள் பாடிய காந்தனே — சந்தோஷ சமயமு —
என்ற மெட்டு.

மதன:— நாதனே — என் உயிரினுக்குயிரான நாதனே
நானுமை பிரியேன் கணமும் சகியேன் ஒரு
நாளும் இனிதனித்து உயிர் வாழ முடியாதென் நாதனே

அமர:—காதலீ — மனமோகன மானினீ காதலீ
மாதர்கட்குள்ளே மணியாய் விளங்கும் உன்
மதி முகம் கண்டு மகிழ்ந்தின்பம் கொண்டேன் காதலீ

## அங்கம் 5 காட்சி 2 பக்கம் 69.

**ராகம் பியாகடை — தாளம் : ஆதி**

பல்லவி

கர்ம மார்க்கத்தின் பெருமை யறிந்தும்
தர்மமாகுமா — தகுமா — உமக்கிது கர்ம

அனுபல்லவி

ஸாரமானது ஸம்ஸார மார்க்கமே
ஸர்வ சிலாக்யமென்று சதுர் வேதமும் சாற்றும் கர்ம

சரணம்

ஜப தப ஹோமாதிகளைச் செய்யாது
சபல சித்தத்தை ஜயிக்கலாகுமோ
பக்தியும் ஞானமும் பௌருஷமில்லாத
புத்தி யீனர்க்கன்றோ — பொருத்தம் ஆமோ கர்ம

## அங்கம் 5 காட்சி 3 பக்கம் 71

**கண்ணிகள் : ராகம் சங்கராபரணம் — தாளம் தேசாதி**

சுத்த அறிவே சிவமென்று கூறுஞ்
சுருதிகள் கேளீரோ? பல
பித்தமதங்களிலே தடுமாறிப்
பெறுமை யழிவீரோ.
உள்ளதனைத்திலு முள்ளொளியாகி
யொளிர்ந்திடு மான்மாவே இங்கு
கொள்ளற் கரிய பிரமமென்றே மறை
கூவுதல் கேளீரோ

(பாரதியார்.)

# FOREWORD.

Brahmasri N. Srinivasa Sastri, who is already known to the public as the Editor and Publisher of Sivagiti-mala, a Sanskrit Poem, of the Eighteenth Century, by Sri Chandra-Sekharendra Saraswati Swami, the Sixty-second Peethadhipathi of Sri Kamakoti Peetha, written on the model of the Gita Govinda of Jayadeva, the Poet of Orissa, of the eleventh century, has in this little Tamil Dramatisation of the leading facts of Sri Sankara vijaya, relating to the story of the life and work of Sri Sankaracharya succeeded in his effort to place before the public a readable and interesting account of our Jagadguru. There are indeed several books on Sri Sankara Vijaya. They are in the form of narration and as such they are read by those who are eager to know the life and the work of the teacher and the Propagator of Advaita Siddhanta in India, in the Sixth Century B. C. Those works are interesting to the intellectually and spiritually inclined students. This drama is intended to place the same facts before the public in an easily appreciable form. The appeal of the dramatic form of composition lies in its emotional basis, while standard works of literature in other styles appeal to the intellectual and the spiritual basis of human imagination.

The story of Sri Sankarachrya has a deep intellectual and spiritual import. To give it an emotional turn is somewhat difficult in its very nature. I feel, after reading this little drama in Tamil, that the author has eminently succeeded in combining in this production the emotional aspect of the story-with the intellectual and the spiritual aspects, without sacrificing any one of the three elements in the story of our Jagadguru.

The life-story of Sri Sankara must be said to be a wonderfully emotional story. After great and hard penance, his parents Sivaguru and Aryamba of Kalati, in Malabar, obtained him as their only son in their old age, by the Grace of Mahadeva. His father died very early in the child's age. The child at eight was the master of all learning and at nine it managed to transcend the barriers of human life by the trickish device of being caught by a crocodile in a river and thus being permitted by the good

mother to become a sannyasi. He took sannyasa on the banks of the Narmada, wandering away thither in search of his Guru. Having caught his Guru, the little guru went to Benares, taught the philosophy of life, by his own life, by his discussion with the Chandala, and by his voluminous commentaries on the basic scriptures of Indian Philosophy, the Prasthana-Traya. He took his disciples, toured over the country on foot three times, founded four great Mutts to continue his work, established the Vedic doctrine of Advaita, and left the world in his thirty-second year. During his wandering life of twenty-three years, he found time to be at the bed-side of his old and sorrowise mother at the point of her death and to give the last sacrament to the sacred kshetra of his birth, with his own hands. That is a life full of emotion to any student of human life.

The intellectual appeal of his life lay in his being recognised as a scholar at the age of nine by his old guru, Govinda Bhagavat Pada, in his defeating the master of Karma-kanda, Mandana-Misra, in his satisfying the learned wife of Mandana-Misra, by his disquisition on the Kama-Sastra, a field of study denied to him by the normal course of his life, with the aid of his Yogic power, in his masterly works, in the simplest style, on the intricate problems of philosophy, in his many small devotional treatises written in the children's style for the edification of the children of God, creeping on the floor of the edifice of Advaita, and above all in his wonderful power of organisation for the permanence of his work after his exit from the World-Stage.

The spiritual appeal of his life lay in his easily winning his adversaries over to his side by his direct intuition and power of self-knowledge, self-control, and self-realisation. Advaita is not an intellectual doctrine, but it is a state of deep and direct realisation of the divinity in oneself.

All these sides of his life have been admirably blended in this little dramatic rendering of the life of Sri Sankaracharya. The main points in the work of Jagadguru have been brought into this play:—

1. Bhatta-pada broke down the Pratyaksha-vada of the Buddhists and the jains and established the doctrine of Veda-Pramanya, by showing the Veda-Purusha, where others saw a live serpent. (Act 1. Sc. 2).

2. Mandana-Misra's doctrine, based on Jaimini's Purva-mimamsa, that Karma is enough for salvation, and that Isvara is unnecessary was broken down by Sri Sankara, and the defeat was accepted by Mandana-Misra and Jaimini himself. (Act. IV. Sc. 3).

3, Purva-mimamsa is not opposed to Uttaramimamsa, the two being in reality, complementary to each other. (Act IV Sc, 3.)

4. The fundamental doctrine of Vedic Religion is that the course of human evolution to Moksha, or liberation from birth, lies along the graded path of Vaidika Karma, Chitta-suddhi, and Gnana. (Act IV Sc 3).

The drama of Sri Sankaracharya's short and historic life was not without its comic side. His having had to enter the dead body of the king Amaraka and his practice of Kama-Sastra, free from sankalpa, which alone taints the body, is full of the comic element. (Act IV. Sc. 4 and 5.)

The Author of this drama has also added, to relieve the intellectual and the spiritual hardness of the material, scenes and characters full of humour. The characters Anantaraman and Minakshi are very intersting. Anantaraman's change of faith and his experiences are true even to-day to some extent. Minakshi is a good type of the shrewd but worldly woman, capable of admiration for the good people and things of the world, but ordinarily satisfied with daily happennings, without much effort to strive after the great ends of life with self consciousness. Act IV. Sc. 2 is a very interesting scene amidst the previous and the following hard scenes. While the great discussion on the comparative merits of Karma and Gnana is going on between two masters, Mandana-Misra and Sri Sankara, Anantaraman easily disposes of the difficult path of Karma in quite the most modern manner. The character of Subuddhi, the comrade of Sri Sankara keeps up the thread of the story,

In fact the whole drama is very interesting. I must particularly make mention of the manner in which the author has exquisitely brought together the important events in the life of Sri Sankaracharya.

These are:—

1. The Incarnation of Mahadeva as Sri Sankaracharya for the uprooting of Un-vedic doctrines and the establishment of the Vedic doctrine of Advaita. (Act I. Sc. 4 and 5.)

2. The grace of Govinda Bhagavat-Pada and of Vyasa, in the moulding of the earthly life of the Jagadguru. (Act. II. Sc.4; Act. III. Sc. 2)

3. The organisation of the four Mutts in the four directions and the Sarvagna-Peetha-Rohana of the Jagadguru at Kanchi, the seat of Devi, the City of Sri-Chakra and Sri-Vidya, which is the same as Brahma-vidya (Act. V. Sc. 5)

4. The Puja of the five Lingas in the Five First Mutts of Advaita (Act. III Sc. I)

5. The Grace of Saraswati, the Goddess of Learning, (Act. V. Sc. 2) in the work of the Mutts which are ever striving, with the aid of the branches of these Mutts and their innumerable disciples, for the propagation and realisation of the truth of Advaita, declared by Mahalinga at Madhyarjuna (Act V. Sc. 4 that the True doctrine of life is the doctrine of Advaita:—

Brahman is eternal:
The Universe is a phenomenon;
Jiva is Brahman
And None other.

Anantapur
30-3-37

**N. K. Venkatesam Pantulu Garu, M.A.L.T.,**
*Retired Lecturer in English.*

ஸ்ரீ:

# ஸ்ரீ சங்கரபகவத்பாதர்.



## அங்கம் 1

### காட்சி 1.

[கைலாசத்தில் ப்ரதோஷகாலம். பார்வதி, பரமேஸ்வரர், விநாயகர், சுப்பிரமணியருடன் வீற்றிருக்க நந்தி, ப்ருங்கி கானம் செய்து கொண்டிருக்கிறார்கள். தர்சனத்திற்கு பிரும்மா, இந்திரன் முதலிய தேவர்கள் பிரவேசம்.]

தேவர்கள்:— [எல்லோரும்]

உலகெலாம் உணர்ந்தோதற் கரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத்தாடுவான்
மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.

பார்வதி:—நாதா! இதென்ன! தேவர்கள் எல்லோரும் ஏன் வாட்டமுற்றிருக்கிறார்கள்? இவர்களுக்கு என்ன குறை?

பரமசிவன்:— ஹே! விரிஞ்சி! ஸகல தேவர்களும் இவ்விதம் வாட்டமுற்றிருக்கக் காரணம் என்ன? தேவர்காள்! உங்கள் குறை என்ன?

ப்ரும்மா:—பக்தவத்ஸலா! பார்வதீரமணா! முற்றுமுணர்ந்த முழு முதற் பொருளே! தாங்கள் அறியாத விஷயமும் உண்டோ! ஆயினும் எங்கள் வாயால் கேட்க அபேக்ஷையோ! இதோ ஸுரபதியே உரை செய்யட்டும்.

தேவேந்திரன்:—[முன் வந்து] ப்ரபோ! பூலோகத்தில் திருமால் அசுரர்களை வஞ்சிக்கும் நிமித்தம், பௌத்தாவதாரம் எடுத்து நாஸ்திக மதத்தை நிர்மாணித்தாலும் நிர்மாணித்தார். — அழிந்தது வேத மார்க்கமும் ஸநாதன தர்மமும் அமணர் அட்டூழியத்தால்; ஓங்கியது நாஸ்திகமதம் அவர்களின் கீர்வாண கிரந்தங்களால்; க்ருத, த்ரேதாதி யுகங்களில் நிறைந்

திருந்த அத்வைத மத நம்பிக்கை குறைவுபட்டு அதர்ம ப்ரவாஹம் தடபுடலாக வந்து 72 மதங்கள் கிளைத்துவிட்டன—வாழ்ந்தது துராசாரம் பௌத்தவாதிகளால். ஹே! பரமேச்வரா! அமிர்தபானம் செய்ததால் ஜீவனை விடமுடியாமல் வைத்துக்கொண்டு தங்களையே சரண்புகுந்தோம். தாங்கள் தான் ரக்ஷிக்கவேண்டும். ப்ரபோ!

எல்லோரும்:—அபயம்! அபயம்!! அபயம்!!!

பரமசிவன்:—[கையமர்த்தி] தேவர்காள்! அறிந்தோம்! அஞ்சற்க! நாம் துஷ்டர்களைச் சிக்ஷித்து தர்மஸ்தாபனம் செய்து உங்களை ரக்ஷிக்கிறோம். நாம் பூலோகத்தில் அவதரித்து ஞானோபதேசத்தால் மக்களனைவரையும் நல்வழிப்படுத்தி ஞானமார்க்கத்தை ஸ்தாபிக்கிறோம். — முதலில் பூலோகவாஸிகளை ஞானோபதேசத்திற்கு யோக்கியர்களாக்கும்பொருட்டு கர்ம மார்க்கத்தை ஸ்தாபித்தல் அவசியம். ஆகவே நான் சொல்கிறபடி செய்யுங்கள்.

எல்:—ப்ரபோ! அப்படியே. அருள்புரியவேண்டும்.

பரம:—ஸுரேசன் ஸுதன்வா என்ற அரசனாக பூலோகத்தில் ராஜ்யபாரம் செய்து, பௌத்தர்களை வெல்ல வருபவர்க்குதவி செய்து, அவர்களது துராச்சாரங்களைத் தொலைக்கட்டும். ஷண்முகா நீ பட்டபாதன் என்ற நாமத்துடன் பிராம்மண குலத்துதித்து ஸுதன்வாராஜனுக்குத் துணை செய்து பௌத்தர்களை வாதில் வென்று அவர்களைக் கர்ம மார்க்கத்தில் ஈடுபடச்செய். பிதாமஹரே! தாமும் மண்டனமிச்ரர் என்ற பெயருடன் நிர்மலமான நர்மதாநதிதீரத்தில் உமக்குப் பிரியமான மீமாம்ஸகமதப்பிரவர்த்தகராக அவதரித்து, கர்ம மார்க்கத்தை அபிவிருத்தி செய்யும். இதர தேவர்களும் பிராம்மணர்களாகப் பிறந்து தர்மமார்க்க பிரவர்த்தர்களாகி வைதிக கர்மானுஷ்டானரதர்களாகச் சஞ்சரிக்கட்டும். அமரர்காள் அஞ்சற்க! ஸத்கர்மானுஷ்டானங்களின் பலனாக, ஸனாதன தர்மம் தானே பிரகாசிக்கும். நாமே காலடியில் அவதரித்து உங்களனைவரையும் வென்று உயர் வைதிகஞானமார்க்கத்தை நிலைநாட்டி, வேதாந்தோபநிஷத்துக்களுக்கு பாஷ்யம் செய்து, ஜகத்குரு பட்டம் எய்தி, ஸர்வக்ஞபீடாரோஹணித்து

சுத்த அத்வைத மதத்தை ஸ்தாபனம் செய்தருள்வோம். இனி உங்கள் கவலையை ஒழியுங்கள்.

ப்ரும்மா:—ப்ரபோ! பூலோகத்தில் — நிரீச்வர வாதிகளான அக் கொடிய பாதகர்களிடையே — எங்களுக்கு ஜன்மமா? எவ் வாறு சகித்து வாழ்வோம் ஹா! — கஷ்டம்!

பரம:—ஒன்றுக்கும் அஞ்சவேண்டாம். முன்பு மகாவிஷ்ணு லோக ஸம்ரக்ஷணார்த்தம் மத்ஸ்ய, கூர்ம, வராஹாதி அவதாரங்கள் எடுக்கவில்லையா? நாமும் தடுத்தாட்கொள்ளுகிறோம். சென்று வாருங்கள். இனி கவலை ஒழியுங்கள்.

எல்:—ஆதிமத்யாந்தரஹிதா! அனுதரக்ஷகா!! எல்லாம் தங்கள் கிருபை. தன்யர்களானோம்.

(பாடுகிறார்கள்)

முக்தி நெறியறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பக்தி நெறி யறிவித்துப் பழவினைகள் தீரும் வண்ணம்
சித்தமலம் அறிவித்துச் சிவ மாக்கி யெனையாண்ட
அத்தனெனக்கருளியவாறார் பெறு வாரச்சோவே
சங்கரனே சங்கரனே சம்போ கங்காதரனே
சங்கரனே சங்கரனே சம்போ கங்காதரனே.

---

## அங்கம் 1.

### காட்சி 2.

[பாடலீபுரம் அரண்மனை வாசல். குருவித்யாதரர், அமர சிம்மன் பேசிக்கொண்டே வருதல்.]

வித்யா:—அர்ஹத்ப்யோ நம: அமரஸிம்மரே! நாம் என்ன ஸமாளித்துக்கொண்ட போதிலும் அவ்வந்தணப்பதர் [பற்களைக் கடித்துக்கொண்டே] பட்டனை நினைக்குந்தோறும் என்னை யறியாமல் கோபம் பொங்குகிறது. உடனே அரசனைக்கொண்டு அக்கொடியனை சிரச்சேதம் செய்யும்படி மனம் தூண்டுகிறது.—

அமர:—அவசரம் வேண்டாம். ஆத்திரக்காரனுக்குப் புத்தி மட்டு என்பர். நம்மெல்லோரையும் ஏதோ பெரிய சூழ்ச்சிக்காரர்கள் என்று அரசன் நினைக்கிறான். நாமும் அவசரப்பட்டு ஏதாவது சொன்னால் ஒருக்கால் நம்மையே அவன் சந்தேகிக்கக்கூடும்.— இப்பொழுதுதான் நாம் வெகு ஜாக்ரதையாக நடந்துகொள்ளவேண்டும்.

வித்யா:—ஆமாம், நீர் சொல்வதும் உண்மைதான். கட்டாயம் பட்டனும் இங்கு வருவான். எப்படியாவது அவனை ஒழிக்க இன்று அரசனிடம் உத்திரவு வாங்கிவிடவேண்டும்.— இருக்கட்டும்! அமரஸிம்மா! என்ன ஆச்சரியம்! நாம் செய்த சூழ்ச்சிகளெல்லாம் பாழாகியதே!— அச்சண்டாளனை ஏழாவது மாடியிலிருந்து பக்கத்திலுள்ள பாறையில் தள்ளியும் அவன் யாதொருவிதமான துன்பமும் இல்லாது தப்பி விட்டானே!— தவிர நமக்கல்லவோ புத்தி புகட்ட வருகின்றான். இவன் தொலைந்தாலல்லது நமக்கும் நம் மதக்கொள்கைகளுக்கும் ஆபத்து நிச்சயம். வா, தர்பாருக்குச் செல்வோம். [செல்கின்றனர்.]

[ஜீமூதரும், வேத நிக்ரஹனும் பேசிக்கொண்டே வருகிறார்கள்]

வேத:—ஜீமூதரே! கேட்டீரோ பட்டன் சொல்றதை.— வேதத்துக்கு அர்த்தம் சொல்லுகிறான்! வேதத்தில் புருஷனுடைய லக்ஷணத்தை எப்படி சொல்லியிருக்கிறது தெரியுமோ! ஆயிரம் தலை, ஆயிரம் கண், ஆயிரம் கை, [கையைக் காட்டி] எல்லாம் இந்த பத்து அங்குலத்துக்குள்ளே — [சிரிக்கிறான்] இவனே வேத புருஷனும். ஈசுவரனும் அவனே தானும் [சிரிக்கிறான்] நடந்தது, நடக்கிறது, நடக்கப்போகிறது முக்காலத்துக்கும் முதல்வனும், எல்லாத்துக்கும் வேதமே காரணமாம் [சிரிக்கிறான்] அதுவும் எந்த லோகத்தில் [இரண்டு கைகளையும் விரித்து] நிச்சயம் இந்த உலகத்தில் இல்லை. இந்தமாதிரி ஒரு மிருகம், பூச்சி, புழுகூட காணமுடியாதே.

ஜீமூதன்:—அந்த விசாரணை எல்லாம் நமக்கேன். நம் உயரிய மதந்தான் அவற்றையெதையும் ஒப்புக்கொள்ளவே யில்லையே. தீவினைகளைச் செய்தால் அவற்றின் பயனாகிய கெடுதி நமக்கு

இயல்பாக வரும் வினைப்பயனை ஊட்டுவதற்கு ஓர் முதல்வன் வேண்டுமோ— இந்தப் பூச்சிக்கு நாம் பயப்படவேணுமாம். என்ன பேத்தல்.

வேத:—புத்தியில்லாத மடையன்! வேதம் வீண் முழுப்பொய் அது சொல்லுகிறது என்று பெறற்கரிய இம்மனித சரீரத்தைப்பெற்று நிஜமான ஆனந்தத்தை யடையாமல் வீணே யாகமென்றும், விரதங்கள் என்றும் பிரயாசைப்பட்டு, கொஞ்சம் கூடச்சுகமில்லாது கஷ்டப்படுகிறார்களே. யாகமாம், யக்ஞமாம், ஈவு இரக்கமில்லாதவர்கள்.

ஜீமூத:—நாழிகையாகிவிட்டதே. வாரும் தர்பார் செல்வோம். [செல்கிறார்கள்.]

[ஸீன் தூக்கியதும் ஸுதன்வா அரசன் தர்பார்.]

ஸுதன்வா:— மந்திரீ சில நாட்களாக நம்மனமே பெருங் குழப்பம் அடைந்திருக்கிறது. இவ்வுலகில் ஒருவன் ஒரு மதத்தில் வேண்டுமென்று கருதிப் பிறப்பதில்லை. ஒவ்வொரு மதத்தினரும் அவரவர்கள் கொள்கையையும் கைப்பற்றி நடத்தல் இன்றியமையாததே. தத்தம் மதமே பெரிதெனை இதரர்களை இழிவுபடுத்தலும் துன்புறுத்தலும் மிகக் கொடியதே. எல்லாவற்றையும் ஆராய்ந்து உயர்வு, தாழ்வு அறிந்து ஒருசமயம் விட்டு மற்றொன்றை அடைவது வெகு சிலாக்யமே. நான் பற்பலவற்றையும் யோஜிக்கிறேன். உண்மை துலங்கவில்லையே.

மந்திரி:—அரசே! தாங்கள் கூறுவதுபோலவே ஜனங்களும் ரொம்ப கஷ்டப்படுகிறார்கள். கலவரம் ஏற்படுவதாகக் கொஞ்சம் தெரிகிறது. ஜைனர்களும், பௌத்தர்களும் இதர மதஸ்தர்களை ரொம்பவும் வருத்தி வருகின்றனர். அவர்கள் அட்டகாஸம் நாளுக்கு நாள் அதிகரித்தே வருகிறது. நேற்றுகூட பௌத்தர் மடத்தில் ஏதோ குழப்பம் நடந்ததாகக் கேள்வி.

[வித்யாதரர், அமரஸிம்மன், ஜீமூதன், வேதநிக்ரஹன் ஒவ்வொருவராக வந்தமர்தல்]

எல்:—அர்ஹத்ப்யோ நம: [அமர்கின்றனர். தூதன் வருகிறான்]

தூதன்:—அரசே! வாயிலில் குமாரில பட்டாசாரியர் தம்மைக் காண வந்திருக்கின்றனர்.

ஸுத:—வரச்சொல் [தூதன் செல்கிறான்]

வித்யா:—அரசே! ப்ராம்மணர்கள் உறவு தங்களுக்குத் தகாது. இது நம் குலாசாரத்திற்கு யோக்யமன்று. தவிர இங்கு வந்திருக்கும் அந்த அந்தணப்பதர் எங்கள் சோறுண்டு வளர்ந்து கல்வி கற்று எங்களுக்கே துரோகம் செய்துவிட்டு, எங்கள் முன்னிலையிலேயே தங்களைக் காண வந்திருக்கிறான். குருத்ரோகம் செய்தவனும், குலத்துரோஹியுமான அவன் யாதொரு விசாரணையுமின்றி கொலை செய்யத்தக்கவன். அவ்விதம் உத்திரவிடுவதே தங்களுக்கழகாகும்.

[பட்டபாதர் சிஷ்யர்களுடன் வருதல்]

ஸுத:—[எழுந்து நின்று] வரவேணும். அமருங்கள்.

[பட்டர் ஆஸனத்திலமர்கிறார்.]

பௌத்தர்கள்:—[காதைப் பொத்திக்கொண்டு] அர்ஹத்!—அர்ஹத்! இவனுக்கு இங்கு என்ன மரியாதை!—என்ன வரவேற்பு—

[முணுமுணுக்கிறார்கள்]

பட்டபாதர்:—அரசே! நீர் பக்ஷபாதமின்றி எல்லா வர்ணாசிரமங்களையும் பரிபாலிக்கின்றீர். நான் சொல்வதைச் சற்று செவிசாய்க்கவேண்டும். இதோ எதிரில் இருக்கும் இக்கொடியர்கள் வேதத்தின் உண்மையான கருத்தறியாது காரணமின்றி வேதமார்க்கத்தைப் பரிஹஸித்தும், வேதாத்யயனம் செய்யும் பிராம்மணர்களைப் பலவாறாக நிந்தித்தும், துன்புறுத்தியும் வருகின்றனர். விளக்கு வைத்தால் விட்டில் விழும் என்று மாலைக்காலத்து உண்டும், தரையிலுள்ள சிற்றுயிர்கள் காலினால் மிதிபட்டு இறத்தல் கூடுமென்று பீலிகொண்டு பெருக்கியும், உரியில் வாழ்ந்தும் இன்னும் பலவித உபாயங்களைக் கொள்கைகளாயுடையதும் எங்களுக்குக் கண்கூடாகப் பொய்யென்று தோன்றும் இப்பாஷண்ட பௌத்தமதத்தைத் தழுவாததால் நாங்கள் இவர்கள் கொடுமைக்குட்படவேண்டுமா? தாங்களே சற்று சிந்தித்துப் பாருங்கள்.

வித்யா:—மகாராஜா! பார்த்தீர்களா? என்ன தைர்யம்! தங்கள் முன்னிலையில் கூட கொஞ்சமும் பயமின்றிப் பேசுகிறான்.

ஜீமுதன்:—சண்டாளன்!

வேத:—நன்றிகெட்டவன்!

அமர:—குருத்ரோகி!

மதியூகி:—சபையோர்களே! அமைதி, அமைதி! அரச சபை என்பது ஞாபகமிருக்கட்டும்.

ஸுத:—மந்திரீ! நாம் எதையும் தீர விசாரணை செய்த பிறகே நியாயம் சொல்லவேண்டும். இது மத சம்பந்தமான வழக்காதலால் இரு திறத்தாரும் வாதம் செய்து அவரவாது கக்ஷிக்குச் சரியான பிரமாணம் பிரத்யக்ஷத்தில் காட்டட்டுமே!—

பட்ட:—அரசே! அதுவே உசிதம்!

வித்யா;— அரசே! நமது மதத்திற்குப் ப்ரத்யக்ஷம் காட்டத் தேவையே யில்லையே. அவைகள் வெளிப்படையான தெளிந்த ஸித்தாந்தங்கள் என்பதைத் தாங்களும் அறிந்தவரே. இவன் சூதைத் தாங்கள் அறியவில்லை போலும். இவன் வாதத்தில் வல்லவனானது நம் பௌத்த கிரந்தங்களை அப்பியஸித்ததால்தான். நம்மிடம் கற்ற வித்தையை நம்மிடம் காட்டத் தலைப்பட்டான் இப்பாதகன். ஒருவேளை அப்படியே இவன் வாக் சாமர்த்தியத்தால் நம்மை ஜயித்தாலும் அப்புகழ் நமக்கேதான் உரியது. அதனால் வேதம் ஸத்திய மென்பது எப்படி நிலைக்கும்?

பட்ட:—அரசே! நான் பௌத்த பாடசாலையில் அத்யயனம் செய்ததால்தான் அவர்களின் வஞ்சகத்தையும் தவறுகளையும் நன்கு அறிந்தேன். ராஜனே! நான் இவர்களை வாதில் சுலபமாக வெல்லக்கூடுமாயினும் இவர்கள் பிடிவாதத்தால் உண்மையை ஒருபோதும் ஒப்புக்கொள்ளமாட்டார்கள்.

வித்யா:—வேதம் ஈசுவரனையே கூறுகிறது என்று இவன் சொல்வதற்கு ப்ரத்யக்ஷமாக பிரமாணம் காட்டினாலன்றி எப்படி ஒப்புக்கொள்ள முடியும்.

ஸுது:—மந்திரீ! [கோபத்துடன்] இவர்கள் சச்சரவிடுவதை நோக்கின் இவர்கள் வாதம் செய்வதிற் பயனில்லை என்றே தோன்றுகிறது. வேறு உபாயம் செய்யவேண்டும். என் செய்யலாம்.—

[கொஞ்சநேரம் யோஜித்து மந்திரி காதில் ரஹஸியமாக ஏதோ சொல்லுகிறார். மந்திரி வெளியே போகிறார்.]

ஸுது:—[சபையை நோக்கி] பண்டிதர்காள்! இதுவிஷயமாக வாதம் செய்வதில் பயனில்லை என்று நீங்களே ஒப்புக்கொள்கிறீர்கள். நீங்களோ ஈசன் ஒருவன் இல்லை, அருளென்பது ஏது ஏன்று புகல்கிறீர். அவர் ஈசன் உண்டென்கிறார். உமது புத்திக் கெட்டாத தெய்வீக அருள் இருப்பதாக அன்னவர் நிரூபித்தால் உமது வாதம் பயனற்றதே யாகும் அன்றோ? ஆதலின் நாம் பாரபக்ஷமின்றி நியாயம் வழங்க ஒரு பரீக்ஷை செய்யப் போகிறோம் —

வித்யா:—நமது மதத்திற்கு பரீக்ஷையும் தேவையா? எங்களுக்கும் தோல்வியா? அந்தக்குமாரபட்டன் வீண் வம்புக்கு அழைக்கிறான். உடனே கழுவிலேற்ற வேண்டுவதைத்தவிர என்ன வழியுளது?

[இதற்குள் மந்திரி ஒரு கலசத்தைக் கொண்டுவந்து மத்தியில் வைக்கிறார். பௌத்தர்கள் ஒருவரையொருவர் கலக்கத்துடன் பார்த்துக்கொள்கின்றனர்.]

பட்ட:—இவர்கள் கூறுகிறபடி வேதத்திலிருந்து பிரத்யக்ஷப்ரமாணம்காட்டின் இவர்கள் வழிப்படலாமே. [பௌத்தர்களை நோக்கி] சம்மதந்தானே? [பௌத்தர்கள் பட்டரை நோக்கி விழித்து மௌனம் சாதிக்கின்றனர்.]

ஸுது;—சபையோர்களே! இந்தக்கலசத்தில் உள்ள வஸ்துவை யாதென்று சொல்லி வெளியாக்குபவரெவரோ அவரே வென்றவராவர். அவரது மதமே ஸத்யம். எவர் துணியாமல் மௌனம் சாதிப்பரோ, அவர்கக்ஷியே தூர்க்கக்ஷி. அவர்களே தோற்றவராவர். என் தண்டனைக்குரியவர். [பௌத்தர்கள் ஒருவரையொருவர் பார்க்கின்றனர்.]

வித்யா:—ஹே! ராஜன்! எங்களுடைய புத்தி சாமர்த்தியத்தால் இதற்குள் ஒரு கொடிய சர்ப்பமே உளது என்று அறிந்தோம். யாராயினும் சரி இதை எடுத்தால் விஷம் தீண்டி மறிப்பது திண்ணம். ஆகையால் நாங்கள் இந்த சாசஸிக கார்யத்தைச் செய்ய முற்படோம். தெய்வம், அருள் ஒன்று உண்டென்று பிதற்றும் இப்பட்டனே அதைச் செய்யட்டும்.

பட்ட:—அரசே! இதுவே சரியான சந்தர்ப்பம். வேதப்ரமாண்யத்தை காட்டுகிறோம். [எழுந்து கலசத்தை அடைந்து கைகூப்பி] ஹே! வேதபுருஷா! முன்னம் எனக்குத் தோன்றுத்துணையாயிருந்து, என் சரீரத்தைக் காத்து சிறிதே சந்தேகித்த காரணத்தால் என் இடது கண்ணை கற்குத்தும்படி செய்தாயல்லவா? எனக்கு எள்ளளவேனும் சங்கையில்லை. நீரே உமது ஸத்யத்தை நிலைநிறுத்தி அருள்புரிய வேண்டும்.

வானந்துலங்கிலென் மண்கம்பமாகிலென் மால்வரையும்
தானந் துளங்கி தலை தடுமாறிலென் றண் கடலும்
மீனம் படிலென் விரி சுடர் வீழிலென் வேலை நஞ்சுண்
டுனமொன்றில்லா வொருவனுக் காட்பட்ட உத்தமர்க்கே.

[என்று சொல்லி மூடியை விலக்கி கையை கலசத்திற்குள் விடுகிறார்.]

பௌத்தர்கள்:—அப்பா! தொலைந்தான்! தொலைந்தான் பட்டபாதன்.

[பட்டபூர்தர் தாமிரமயமான வேதநாராயணமூர்த்தியை எடுக்கிறார். மலர்மாரி ஜயகோஷம்]

எல்:—[அதிசயத்து] ஹா! — ஹா!! —ஹா!!!

[ஜீமூதன் வேத நிக்ரஹன் எழுந்து ஓட யத்தனிக்கிறார்கள்.]

ஸுதன்வா:—[ஆஸனத்தை விட்டெழுந்துவந்து, பட்டபாதரை வணங்கி, ஆலிங்கனம் செய்துகொண்டு] புராணபுருஷா! தேவதேவா! உமதருளே அருள். ப்ரத்யக்ஷ ஸர்ப்பத்தைமாற்றி என் ஸந்தேகத்தையும் தவிர்த்து உண்மை வழிகாட்டியருளினீர். ஹே! உத்தமா! உம்மகிமை தெரியாது உம்மைப் பரீக்ஷித்த அபசாரம் பொருத்தருளவேண்டும். உமது மதமே மெய்மதம். நீரே என்குரு, தெய்வம். [திரும்பி, கோபத்துடன்

பௌத்தர்களை நோக்கி] மந்திரி, இவர்களெல்லோரையும் சிறையிலிட்டுத் தக்கபடி தண்டியும். அவர்களியற்றியுள்ள கிரந்தங்களை யெல்லாம் நெருப்பிலிட்டுப் பொசுக்கும். அவர்களது கோயில்கள் மடங்கள் எல்லாவற்றையும் இடித்துப் பாழாக்கும்.

பட்ட:—அரசே! கோயில்களை இடித்துத்தள்ள வேண்டாம். விக்ரகங்களை அகற்றி வேதத்திற் சொல்லிய ஈசுவரனைப் பிரதிஷ்டை செய்து வழிபாடு நடக்குமாறு செய்யும். எல்லா கிரந்தங்களையும் பொசுக்க வேண்டாம். அமரகோசத்தில் தர்மாதர்ம விசாரம் இல்லை. வித்தியார்த்திகளுக்கு மிக்க உபயோகமானது பற்றி அதொன்றுமட்டும் இருக்கட்டும். ஸத்ய புத்தியுடன் உயர் வைதிக மார்க்கத்தை அனுஷ்டிக்கத் தலைப்படுவோர்களை மன்னித்தருளும். அரசே! உம்மையும் உம் நல்லமைச்சரையும் இத்துஷ்டர்களிடமிருந்து விலக்கவே இங்குவந்தேன். என் எண்ணம் ஈடேறிற்று. உங்களுக்கு ஸர்வ மங்களமும் உண்டாகுக. ஈசன் உமக்கு தீர்க்க ஆயுளும் எல்லா நன்மையும் அளிக்கட்டும்.

ஸுதன்வா:—எல்லாம் தங்கள் கிருபை.

பட்டரும் சிஷ்யர்களும்:—[பாடுகிறார்கள்.]

வாழ்க அந்தணர் வானவரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்கதீய தெல்லா மரனாமமே
சூழ்கவையக முந்துயர் தீர்கவே.

---

## அங்கம் 1.

### காட்சி 3.

[காலடி கிராமம் சிவகுரு பண்டிதர்வீடு. சிவகுரு ஆஸனத்தில் உட்கார்ந்திருக்கிறார். முன்பு சிக்குப்பலகையில் விரித்த சுவடி. பாராயணம் செய்து முடித்து.]

சிவகுரு:—

ராகம் கேதார கௌளம்.

பாபம் வாரயதே பரம் கடயதே காலம் பராகுர்வதே
மோஹம் தூரயதே மதம் சமயதே மத்தாஸுரான் ஹிம்ஸதே
மாரம் மாரயதே மஹாமுனி கணைநந்தின: குர்வதே
பார்வத்யாஸ ஹிதாய ஸர்வ நிதயே சர்வாய துப்யம் நம:
[முடிந்ததும் ஆர்யாம்பாள் வருகிருள்]

ஆர்யா:—நாதா! நாழிகையாகவில்லையா! பாராயணங்கள் முடிந்து விட்டனவா? போஜனத்திற்கு எழுந்திருங்கள்.

சிவகுரு:—ஆமாம்! [பெருமூச்சுவிட்டு] தினந்தோறும் சாப்பிடுவதும், தூங்குவதும்தவிர வேறென்ன சுகம் கண்டேன் இவ்வில்வாழ்க்கையில்! யாராவது அதிதிகளை கூட அழைத்து வைத்துக்கொண்டு சாப்பிடலாமென்றாலும் எவரும் வர ஐயுறுகிறார்கள். சொத்திருந்தென்ன! வித்தை இருந்தென்ன! நம்மை சந்தோஷிப்பிக்க ஒரு புத்திரன் இல்லை. நமக்கும் கல்யாணம் ஆகி 25 வருஷங்களாகிவிட்டன. ஜோஸியர்கள் எல்லாம் உனக்கு புத்திரன் உண்டு, உண்டு என்கிறார்கள். இப்படியே ஒவ்வொரு வருஷமாக எனக்கு வயதும் ஐம்பது ஆகிவிட்டது.—உம்.— [பெருமூச்சுவிடுகிறார்.]

ஆர்யா:—ஈசுவரிக்கு இன்னும் நம்மீது கருணைவரவில்லை. ப்ராரப்தத்தை அனுபவிப்பதற்கென ஜன்மம் எடுத்த நமக்கு முன் ஜன்மத்தில் செய்த புண்ணியம் வேண்டாமோ! நாம்கொடுத்து வைத்தது அவ்வளவுதான். வருந்தி என்செய்வது. [கண்களை துடைத்துக்கொள்கிருள்.]

சிவகுரு:—'முக்கடன்களைத் தீர்த்தபின் முக்திக்கு வழிதேடு' என்கிறது வேதம். ரிஷிரிணம் தீர்க்கவேதம் ஓதினேன். தேவ ரிணம் தீர்க்க விரதங்கள் பூஜைகள் செய்தேன். கடைசியாக பித்ருரிணத்தை தீர்க்க வழியறியேனே! எனக்குப்பின் பித்ருக்களுக்கு எள்ளுந் தண்ணீர் இறைக்க, ஹே! ஜகதீசா! ஓர் புத்திரனை அருளி எங்கள் சந்ததியை விருத்திசெய்து எங்களைக்கடைத்தேற்றி வைக்கலாகாதா? ஸர்வேச்வரா!— ஹே பார்வதிரமணா! — மக்களில்லாதனுக்கு மறுமை கிடையாதென சாத்திரங்கள் கூறுகின்றனவே! என்செய்வேன். [பாடுகிறார்]

சாந்தமுலேகா — என்ற மெட்டு தாளம் ஆதி.

பல்லவி:— ஸந்ததி யில்லார் ஸத்கதி சேரார் என
ஸர்வ சாஸ்திரங்களும் சாற்றுதே! —

அ. ப:— ஸார மொன்று மிலா ஸம்ஸார வாழ்வினில் — ஸந்ததி

சரணம்:— ஸர்வ ஸம்பத்துகளும் ஸ்த்ஸதியு மிருந்தென்
ஸத்கர்ம மனைத்தையும் சாஸ்திர விதிப்படியே
சாந்தி ஹோமாதிகள் ஸர்வமும் செய்துமென்
சங்கடம் தீர்த்தருள் ஸர்வ தயாபரா — ஸந்ததி

ஆர்யா:— அம்பிகை! ஜெகதம்பிகை! உனக்கு இன்னமும் எங்கள் மீது கருணைவரவில்லையா?

சிவகுரு:—ப்ரியே! பார்த்தனையா அதோ மேற்குதிக்கில் கவுளி சொல்கிறது. நான் இப்பொழுதுதான் ஒன்று தீர்மானித்திருக்கிறேன்! — ஆம். அப்படிதான் செய்யவேணும்!

ஆர்யா:—[ஸந்தோஷத்துடன்] என்ன நாதா! என்ன விஷயம்! சொல்லுங்கள்.

சிவகுரு:—நாம் இன்றுமுதல் பகலில் ஒருவேளை போஜனம். இரவு முழுவதும் தேவதாராதனம். இப்பொழுதே கிளம்பி சமீபத்திலுள்ள நம் குலதெய்வமான மஹாதேவன் இருக்கும் வ்ருஷாசலம் சென்று காரியம் சித்திக்கும்வரை அங்கேயே இருந்து — அவன் சந்நிதியிலேயே தொண்டு செய்துகிடக்க வேண்டியது என்று நினைக்கிறேன்.

ஆர்யா:—அப்படியே செய்வோம் நாதா. என் மனதில் தாங்கள் இதைச்சொன்னதும் ஏதோ ஸந்தோஷம் உண்டாகிறது. அம்பிகையின் அருள் கிடைக்குமோ! — ஈச்வரி!

சிவகுரு:—அடே ஸுபுத்தி! [ஸுபுத்தி வருகிறான்.]

ஸுபுத்தி:—குரோ! ஆக்ஞை.

சிவகுரு:—நாங்கள் இருவரும் வ்ருஷாசலம் சென்று அங்கு பஜனம் இருக்கப் போகிறோம். நீ எல்லாவற்றையும் பார்த்துக்கொள்.

ஸுபு:—அப்படியே! தங்கள் சித்தம் என் பாக்யம்.

சிவ — ஆர்யா:—[பாடுகிறார்கள்.] ராகம்: தாளம்:

சிவனை நினைந்தவரெவர் தாழ்ந்தார் — சதா
சிவனை மறந்தவரெவர் வாழ்ந்தார் — சதா

மௌன சித்தர்கள் முதல் ஸனகமுனிவர்கள் தம்
வசத்தில் அனுதினமும் வசித்தருளும் பரம — சிவனை
இரும்புத்தம்பத்தை சிதலரித்திடுமோ
நெருப்பிடையில் புழுவந்துயிர் தரித்திடுமோ — மன
வருத்த மின்றி கண்மலர்ப்பரித்து பூசனை செய்து
மாலுக்கு நேமிதந்து பாலித்தருள் புரிந்த — சிவனை

[பாடிக்கொண்டே போகிறார்கள்.]

---

## அங்கம் 1.

### காட்சி 4.

[காலடி கிராமம். நீலகண்ட சாஸ்திரி வீட்டில் ஆசமனம் செய்துவிட்டு பலகையில் உட்கார்ந்து மூக்கை பிடித்துக்கொண்டிருக்கிறார். மனைவி மீனாக்ஷி நதியினின்று வந்து தீர்த்தக் குடத்தை வைத்துவிட்டு அவசரமாகத் திரும்பி]

மீனாக்ஷி:—[பர்த்தாவைப் பார்த்து] என்ன வேண்டிருக்கு! — இன்னம் மூக்கைப்புடிச்சுண்டே என்ன செஞ்சாரது.

நீலகண்ட:—ஆ! என்ன சொல்றே [கண்ணை மூடிக்கொண்டே]

மீனாக்ஷி:—சிவ, சிவா, இத்தனை நாழி மூக்கைப்பிடிச்சுண்டு தூங்கரேளா என்ன? ஜபம் பண்ரேளா [முகவாய்கட்டையில் கையைவைத்து] நன்னாயிருக்கு!

நீல:—[கண்ணை மூடிக்கொண்டே] ஓம் பூர்புவஸ்ஸுவ: [என்று முணுமுணுக்கிறார்]

மீனாக்ஷி:—என்ன பித்தம் ஜாஸ்தியாப்போயிடுத்தோ. கூப்பிட்றது, சொல்றதுகூட காதிலே விழலையோ!

நீல:—[உரத்தகுரலுடன்] ஓம்பூர்ப்புவஸ்ஸுவ: [முணுமுணுக்கிறார்] கொட்டாவி விட்டுக் கைகளைச் சொடுக்குகிறார்.

மீனாக்ஷி:—[கீழேகிடந்த விசிறிகட்டையை எடுத்துக்கொண்டு கிட்டேநெருங்கி] என்ன இது நாழியாயிடுத்தே — எழுந்திருங்கோ [மெதுவாக இடிக்கிறாள்.]

நீல:—[கண்விழித்து பார்த்து, திருதிருவென்று விழித்து] ஆ அடிக்காதே! அடிக்காதே! என்ன சமாசாரம்! ஏனிந்தத்தடபுடல்.

மீனாக்ஷி:—என்ன விகடம் பண்றேள் இப்போ! ஆர்யாம்பாள் ஆத்துக்கு போகவேண்டாமோ? — நாழியாகல்லையா?

நீல:—நீதான் ஆற்றிலேருந்து வந்ததும் வராததுமா என்ன தூங்கறேளோன்னு கேட்டே. நான் கொஞ்சம் ஜபம் நன்னா எறஞ்சு பண்ணினேன்.

மீனாக்ஷி:—நன்னாருக்கு ஜபம் பண்ர லக்ஷணம் — நாழியோ ஆயிடுத்து! — ஆத்தாங்கரேலேயே எல்லாரும் ஒங்கபேரைச் சொல்லி நீங்க அவாத்துக்கு போயிட்டேளோன்னு கேட்டா. நான் எல்லாம் போயாச்சுன்னு சொன்னேன். — அவாத்துலே இன்னிக்கி புண்ணியாவாசனம் இல்லியோ. நம்ம உபாத்யாயம். காலாகாலத்திலே நாலுபேர்களுக்கு சொல்லி அழைச்சுண்டு போகாமே இன்னும் ஒக்காந்திருக்கேளே.

நீல:—நீதான் அருணோதயத்துக்கு முந்தியே நச்சரிச்சு எழுப்பிவிட்டுட்டே. நானும் முழுகிப்புட்டு ஒக்காந்திருக்கேன், ஒக்காந்திருக்கேன், இன்னும் சூரிய உதயமாகல்லே. இப்போ பிடிச்சுபோய் என்ன பண்றது. குழந்தையும் தாயாரும் ஸ்நானம் பண்ணியாகவாண்டாமோ! — சரி, அதிருக்கட்டும் நீ சிவகுரு ஆத்துக்கு போயிருந்தயோ — குழந்தையைப் பார்த்தியோ! எப்படி இருக்கு?

மீனாக்ஷி:—நான்தான் தினம் மூணுதரம் போயிட்டு வரேனே. குழந்தைதான் என்ன! பார்த்துண்டே இருக்கணும் போலேருக்கு. நம்ம நாச்சாமியும் இருக்கே, — அப்படியா? ஸ்வர்ண விக்ரகம்தான்! அங்கே அதைப்பார்க்கப் போயிட்டா திரும்பிவரவே பிடிக்கல்லே.—

நீல:—எல்லாம் அந்த பதிவிரதாசிரோன்மணி ஆர்யாம்பாள் பண்ணின பாக்கியவிசேஷம்! அப்பா! கொஞ்ச அரசமரப்பிரதக்ஷிணமா பண்ணினாள் அவள்! — அவள் அதிர்ஷ்டமே அதிர்ஷ்டம்.

மீனாக்ஷி:—கேட்டேளோ ஒரு சேதியே. கோவில்லே நடந்ததை.

நீல:—என்ன !எந்த கோவில்லே! யாருக்கென்ன?

மீனாக்ஷி:—வ்ருஷாசலத்திலே ஆர்யாம்பாளும் அவாத்துக்காரரும் ரொம்ப அகோரமா பஜனமிருந்தாளோல்லியோ, அப்போ ஒரு நாளைக்கி ஸ்வாமி ஸ்வப்னத்திலே தோன்றி "ரொம்பநாள் உயிரோடிருக்கும் மண்டுக்களான அநேக பிள்ளைகள் வேண்டுமா அல்லது கொஞ்ச ஆயுளுடைய ஸர்வக்யனான ஒரே பிள்ளை வேண்டுமா என்று கேட்டாராம். அவர் ஸர்வக்யனான பிள்ளைதான் வேணும்னாம். அதற்கு ஸ்வாமி தானே பிள்ளையா பொறக்கறதாக சொல்லிட்டு சென்றாரும்! என்ன அதிசயம் பார்த்தேளா!

நீல:—ஆமாம். போனவருஷம் இந்தநாளைக்குத்தான் அதுவும் நடந்தது.

மீனாக்ஷி:—நெஜமாகவே குழந்தை பொறந்துடுத்து பார்த்தேளா!

நீல:—சரி, என்னை சீக்கிரம் கிளம்புங்கோன்னு அவஸரப்படுத்திட்டு பேச்சுக்கொடுத்துட்டாயே — நீயும் வாயோல்லியோ.

மீனாக்ஷி:—நான் வாரமலா? — இதோ கிளம்பிவிட்டேன்.

நீல:—ஆத்தை நன்னா இழுத்து பூட்டிண்டுவா. [செல்கிறார்கள்.]

---

## அங்கம் 1.

### காட்சி 5.

[சிவகுருவின் வீடு. கல்யாணகூடம். வாத்யகோஷம். ஒரு புறம் தொட்டில் போடப்பட்டிருத்தல் சிவகுரு, மீனாக்ஷி, காமாக்ஷி, ப்ராம்மணர்கள், ஸுபுத்தி இருக்கிறார்கள்.]

நீலகண்ட சாஸ்திரிகள்:—[அவசரமாகவந்து] என்ன அண்ணா! நாழியாச்சே. அப்புறம் ராகுகாலம் வந்துவிடும். அங்கே குழந்தை, தாயார் — ஸ்நானம் ஆயிடுத்தோல்யோ!

சிவகுரு:—சாஸ்திரிகளே! கர்மாக்கள் எல்லாம் அவஸரத்திலே விட்டு விடாமல் சரியாக பார்த்துச்செய்யும். அடே ஸுபுத்தி — சாஸ்திரிகள் கேட்கும் சாமக்கிரியைகளை குறைவின்றி கொடு.

நீல:—எல்லாம் அப்போதே வாங்கிண்டுட்டேன். அதோ தாவாரத்திலே ஹோமம் இப்போதான் நடந்துண்டிருக்கு. ஜாதகர்மா, நாமகரணம்தான் பாக்கி. எங்கே? இங்கே ஜோஸ்யர்வாள் வந்திருந்தாளே. [ஸ்திரீகளைப்பார்த்து] அம்மா! குழந்தையை ஒரு புது முறத்தில் வைத்து பட்டைப் போட்டு மூடி இப்படி எடுத்துண்டு வாங்கோ. [மீனாக்ஷி உட்செல்லுகிறாள்] சரி அண்ணா, இப்படியே உட்காருங்கோ.

சிவகுரு:—[உட்கார்ந்து] ஜோஸ்யர்வாள், என்ன ஜனனகாலம் நக்ஷத்திரம் எல்லாம் எப்படி இருக்கு.

ஜோஸ்யர்:—காலையிலேயே குழந்தை ஜாதகம் கணித்துப்பார்த்தேன். ஆஹா! இந்தமாதிரி உத்தமமான ஜாதகம் நான் இதுவரையில் கணித்ததேயில்லை. ஈசுவர வருஷம், வைசாக மாதம் — சுக்லபக்ஷம் — பஞ்சமி — [விரலைமடக்கி] ஆர்த்ரா நக்ஷத்திரம். பஞ்சகிருகம் உச்சம். குழந்தை ஜாதகம் அதியோக ஜாதகம் — தக்கவயதில் ஸர்வக்யனாகி, பெரும்கீர்த்தியடையப்போகிறான்.

சிவகுரு:—ஆயுர் பாவம் எப்படி? பார்த்தீரோ?

ஜோ:—சொல்றேன் உம் [யோஜித்து] எட்டு — [விரலை மடக்கி] எட்டு [சற்று யோஜித்து] எட்டு — உம் பரவாயில்லை. தீர்க்கம்தான். ஆஹா! அந்த கிரகங்கள் அமைச்சல் உண்டே. ரொம்ப தரம்.

சிவகுரு:—ஆயுர் தீர்க்கமில்லையா என்ன? பிதுர்பாவம் எப்படி?

ஜோ:—[காதில் விழாததுபோல் அபிநயத்து, கையைவிட்டு எண்ணி] சம் — க — ர. சரி.

நீல:—பெயர் என்ன வைக்கலாம்.

ஜோ:—மேற்சொன்ன திதி, பக்ஷம், மாஸம் மூன்றிற்கும் சங்கேதமாய் சங்கரன் என்று வைப்பது உத்தமம். ஆத்திலே கேளுங்கோ.

சிவகுரு:—கேட்பானேன். அப்படியே வைத்துவிடுவோம்.

நீல:—ஸாக்ஷாத் ஈசுவரன் அருளால் பிறந்த குழந்தைக்கு அவன் பேரை வைப்பதுதான் சரி. — ஆமாம் அண்ணா! அப்படித்

தான் இருக்கணும். — சங்கரன்! ஆஹா! என்ன திவ்யமான பெயர். [மீனாக்ஷி குழந்தையை முறத்தில் கொண்டு வருகிறாள்.]

சரி — உம் — சுக்லாம்பரதரம் விஷ்ணும் ........... சாந்தயே.

சிவகுரு:— [வாயால் முணுமுணுத்துக் கொண்டே] மமோபாத்த சமஸ்த துரிதக்ஷயத்வார பரமேச்வரப் ப்ரீத்யர்த்தம் — ஜாத கர்ம கரிஷ்யே

நீல:— அங்காதங்காத் — ஸம்பவஸி — ஹ்ருதயாத் — அதி ஜாயஸே — ஆத்மாவை புத்ர நாமாஸி — ஸஜீவ சரத: சதம்.

சிவகுரு:— [மேலே சொன்னதைச் சொல்லுகிறார்]

நீல:— சரி நம்ம செய்யவேண்டிய காரியங்கள் எல்லாம் ஆச்சு. குழந்தையை நல்லவேளையிலே தொட்டில்லே போடணும். அது பெண்டுகள் கார்யம்.

சிவகுரு:— [பிராம்மணர்களை வணங்குகிறார்]

நீல:— அஸ்ய யஜமானஸ்ய ஸர்வாபீஷ்ட ஸித்திரஸ்து. ஸமஸ்த மங்களானி ஸந்து மாதா பித்ரோ: சிசுச்ச தீர்க்காயுஷ்ய மஸ்து —

எல்லோரும்:— ததாஸ்து [புருஷர்கள் வெளியே செல்கிறார்கள்.]

மீனாக்ஷி:—அடியே! காமு! அம்பாவைக் கூப்பிடு. புருஷாள் எல்லாம் போய்விட்டார்கள். குழந்தையை நல்ல வேளையில் தொட்டிலில் போட்டு தாலாட்டவேண்டாமோ. [ஆர்யாம்பாள் வருகிறாள்]

காமாக்ஷி:— அம்பா குழந்தையை வாங்கித் தொட்டிலில் துணியை மெத்தென்று போட்டு போடு. [மீனாக்ஷியிடமிருந்து வாங்கி தொட்டிலில் போடுகிறாள்]

காமாக்ஷி:— மீனாக்ஷி! குழந்தையை பார்த்தாயா! என்ன புன் சிரிப்பு.!

...க்ஷி:— அம்பா உன் பாக்கியமே பாக்யம். அம்பா! இரண்டு ...ருஷங்களுக்கு முன் உன்னை பரிஹாஸம் பண்ணினேனே. ...கம் இருக்கா, குழந்தை, குழந்தைன்னு என்ன சிரமம் ...ய்! இப்போ கவலை விட்டதா.

ஆர்யா:— [வெட்கத்துடன் தலை குனிந்து] எல்லாம் உங்களுடைய ஆசீர்வாதம்தான்.

காமாக்ஷி:— மீனாக்ஷி உனக்கு எப்போ பார்த்தாலும் யாரை யாவது பரிஹாஸம் பண்ணத்தான் பிடிக்கும்.— குழந்தையை தொட்டிலில் போட்டாச்சு — பாட்டுச் சொல்லி தாலாட்ட லாமே. என்னமோ பேசிண்டே இருக்காயே.

மீனாக்ஷி:— கோவிச்சுக்காதேயடியம்மா. சும்மா சொன்னேன். சரி பாடுவோமே [மூவரும் பாடுகின்றனர் அனுபக்தம் பார்க்க.]

மீனாக்ஷி:— அம்பா, நாழியாச்சு, நான் வரட்டுமா, அவர் அப்பவே ஆத்துக்கு போயிட்டார். வீடு பூட்டிருக்கு, சாவி எங்கிட்டே இருக்கு.

காமாக்ஷி:— இல்லை அம்பா நானும் போகணும். நாத்தனார் நேத்தி க்கு வந்திருக்கார். கோவிச்சுப்பார். நான் போறேன்.

ஆர்யா:— இப்போதானே வந்தீர்கள். ரொம்ப அவஸரமான காரிய மா இருந்தால் போயிட்டு வாங்கோ. இந்தாருங்கோ [மஞ்சள் குங்குமம் வெற்றிலை, பாக்கு பழம் கொடுக்கிறாள்.]

காமாக்ஷி:—அம்பா நாங்கள் வருகிறோம்.

மீனாக்ஷி:—அம்மா பலபேர் த்ருஷ்டி கூடப்பட்டிருக்கும். குழந் தைக்கு சுற்றிப்போடு.

ஆர்யா:— ஆகட்டும்! அப்படியே செய்கிறேன். எல்லாம் அம்பிகை யின் அருள். [காமாக்ஷி—மீனாக்ஷி செல்கிறார்கள்]

---

## அங்கம் 2.

### காட்சி 1.

[காலடியில் தெருவீதி. நீலகண்ட சாஸ்திரிகள் தலையை தட விக்கொண்டே தனக்குள் வருத்தத்துடன் பேசிக்கொண்டு வருகி றார்]

நீலகண்ட சாஸ்திரிகள்:—அடாடா! த்சு, த்சு — என்ன கஷ்டம். என்ன கஷ்டம்! — என்னாலேயே ஸஹிக்க முடியவில்லையே!

பாவம் — ரொம்ப நல்லவர் — மகா வித்வான்! — இவ்வளவு வயதான பிறகு! — ஆஹா! தசரதருக்கு ராமர் பிறந்தாப் பலே! — 50 வயது கழிச்சு ஒரு குழந்தை பிறந்ததே! இன்னும் கொஞ்சகாலம் இருந்து கல்யாணம் கார்த்தி பண்ணி பார்த்துவிட்டு அப்புறம் இறக்கலாகாதா! உம் — கொடுத்து வைத்தது அவ்வளவுதான். விதிவலிது! யாரைவிட்டது.

[ஜோஸ்யர் எதிரில் வருகிறார்]

ஜோஸ்யர்:—ஓய்! சாஸ்திரிகளே! என்ன முணு முணுத்துண்டே வரீர். எங்கே இன்னிக்கி அதிகாலையிலேயே கிளம்பிட்டீர். இவ்வளவு வேகமாக.

நீல:—[சற்றுகோபத்துடன்] போங்காணும்போம். நீர் ஒரு மனுஷன் மாதிரி. ஒங்க ஜோஸ்யத்லே நிஜமே வாரதோ? அல்லது தெரியாதோ? செத்துப்போரவாளே சிரஞ்சீவிங்கிறீர். சிரஞ்சீவிக்கெல்லாம் உடனே சீட்டுக் கிழிச்சுடறீரே. பொய் சொல்வதற்கும் இடம் பார்த்துக்க வேண்டாமா?

ஜோ:—என்ன ரொம்ப கோவிச்சுக்கிறீரே. என்ன பிசகு பண்ணி விட்டேன்.

நீல:—பிசகா! — அப்போதே — புண்யவாசனத்தன்றைக்கே பிதுர்பாவம் எப்படின்னு எல்லாம் கேட்டாரே அந்த ஸாது ப்ராமணன் சிவகுரு. நீர்தான் உண்மையைச் சொல்லித் தொலேச்சா என்ன? ஏதாவது பரிஹாரமாவது செய்யச் சொல்லலாமோல்லியோ. இப்போது அவருக்கு ஆபத்து வந்துட்டதேங்காணும்! என்ன பண்ணறது இன்னமே.

ஜோ:—என்ன! என்ன! சிவகுருஸ்வாமிக்கா! எப்போ! முந்தாநாள் தானே உபநயனத்திற்கு முகூர்த்தம் வச்சுக்கொடுத்தேன்.

நீல:—ஆமாங்காணும் ஆமாம். சற்று முன்புதான் போய்விட்டார். பாவம் இன்னமே, அந்த அம்மா பரமஸாது — அவள் பாவம் இந்த வயசுலே! இந்த கஷ்டம் — அந்தம்மாளுக்கு வரப் படாது

ஜோ:—ஓய் எனக்கு அப்பவே தெரியுங்காணும். அந்த ஏழரை நாட்டான் பார்வை உண்டே, ரொம்பகடுமை, பரிஹாரம் எல்லாம் ஒன்றும் பலிக்காது, நான் அப்போ சொன்னு அப

சகுனம் மாதிரி இருக்குமென்று அதை மொழுகிப்புட்டேன். இன்னொரு சமாசாரம் சொல்றேன். இப்போ கேட்டுக்கும்.

நீல:—என்ன! என்ன! என்ன!

ஜோ:—பிள்ளையாண்டான் இருக்கானே அவனுக்கும் அற்ப ஆயுஸ் தான். எட்டு வயதுன்னுதான் சொல்லணும். மேலே — ஊஹூம் — எல்லாம் துரதிர்ஷ்டம் பிடிந்த குடும்பங்கணும் போம். [எதிரில் அழகாக அலங்கரித்துக் கொண்டு அனந்தராமன் வருகிறான். மனைவியும் கூட வருகிறாள்]

அனந்தராமன்:—[கிட்டே நெருங்கி] ஸ்வாமிகளே சிவகுரு பண்டிதர் கிருஹத்திலே உபநயனம் என்று சொன்னாளே. புது ஆத்திலேயா அல்லது பழய ஆத்திலேயா. [அவன் மனைவி ஒரு புறமாக ஒதுங்கி நிற்கிறாள்.]

நீல:—ஏன். நீங்க எந்த ஊர்.

அன:—இப்போ இருக்கிறது இந்த ஊர்தான். வருவது பாடலீபுரத்திலிருந்து.

ஜோ:—பாடலீபுரமா! [சற்று உற்றுபார்த்து] இரு! உன் பேர் என்ன, அனந்துவாடா?

அன:—ஆமாம் மாமா! தெரிஞ்சுண்டுட்டேளே என்னை. எங்காத்லே எல்லாரும் சௌக்யந்தானே?

நீல:—அடே நீதான் எங்கேயோ சாமியாராப்போய் எங்கேயோ ஓடிப்போயிட்டேன்னுளே. அப்புறம் ஜைன மதத்திலே சேர்ந்துண்டு பாடலீபுரத்திலே வேலையாக இருக்கிறதாக சொன்னு. இப்போ என்ன இந்த வேஷம் போட்டிருக்கே. ஏண்டா. என்ன கச்சம் என்ன யோக வேஷ்டி! உம்!

அன:—இல்லே சாஸ்திரிகளே. எறஞ்சு பேசாதேங்கோ. உங்க கிட்டே நிஜத்தை சொல்றேன். நீங்க ஒத்தர்கிட்டேயும் சொல்லாதேங்கோ. நான் சுகமா வேலே கிடைக்கதேன்னு ஜைனனுப்போய் வேலைப்பார்த்துண்டு வந்தேன். அரண்மனேலே கொஞ்ச நாளைக்குமுந்தி ராஜாங்கமே மாறிட்டுது.

ஜோ:—ஓஹோ! பட்டபாதர் ரிபாதம் பண்ணினூர்னு சொல்லிண்டாளே. அப்பவா?

அன: — ஆமாம் உடனே ராஜா பௌத்தர்கள் எல்லாரையும் தண்டனை செய்ய ஆரம்பித்தார். நான் உடனே ராஜ்யத்தை விட்டுவிட்டு பூணலைப் போட்டுண்டு முன்போல ப்ராம்மணனுக மாறிவிட்டேன். இதோ பாருங்கோ பூணுல். [பூணூலைகாட்டுகிருன்.]

நீல: — சந்யாஸம் எல்லாம் ஓடிப்போயிடுத்தோன்னே. — அதுசரி அதுயார்.

அன: — இல்லை மாமா வரவழியிலே மாஹிஷ்மதிவந்தேன். அங்கே மண்டன மிச்ரர்னு — ஒரு பெரிய பண்டிதர் இருக்கார். அவர் கிட்டே மாட்டிண்டுட்டேன். அந்தூரில் என்னை கண்டதும் என்னை இழுத்துக்கொண்டு போய் என்னை கல்யாணம் பண்ணிக்கிண்டாதான் விடுவேன்னுர். வேறே வழியில்லை. சரின்னு இவளை கல்யாணம் பண்ணிண்டேன். அவளையும் கட்டிண்டு சோத்துக்கு என்ன செய்யரது. பூர்வீக சொத்து கொஞ்சம் இருந்துதோல்லியோ. பத்தாம் உபாத்யாயம் உண்டே! எப்படியாவது மானமாய் அதையும் வைச்சுண்டு ஜீவனம் பண்ணலாம்னு கிளம்பி வந்தேன். நேத்து ராத்ரி — அதுபேர் என்ன — மறந்துட்டேனே அந்த கிருமத்திலே தங்கினேன். இன்னிக்கி நம்ம சிவகுரு மாமாவாத்திலே உபநயனம்னுசொன்னு. அங்கேபோனு நாலுநாளைக்கு நன்னு சாப்பிடலாம். எல்லோரையும் பார்க்கலாம்னு வந்தேன். எங்க பெரியவாள் நாளிலே எங்க உபாத்யாயம்னு — அதான். —

ஜோ: — நீ வந்தவேளை நல்ல வேளைதான். பேர்வழியே போய் விட்டாரா.

அன: — என்ன! எப்போ! [வாயில் விரலை வைக்கிருன்] என் துரதிர்ஷ்டந்தான் அடாடா.

நீல: — சரி. நீ இப்படியே நம்பாத்துக்கு போ — மேலே ஆகவேண்டிய காரியத்தைப் பார்க்கணும். ஜோஸ்யர்வாள் வாரும் போவோம். [ஜோஸ்யரும், நீலகண்ட சாஸ்திரிகளும் செல்கிருர்கள்.]

அன: — அடியே! நல்லவேளை நான் இவாளைபார்த்தது வா. அந்த சாஸ்திரிகளாத்துக்கு போவோம். [வந்தவழியே செல்கிருர்கள்.]

---

## அங்கம் 2.

### காட்சி 2.

[சிவகுரு வீடு. ஆர்யாம்பாள் விதவா கோலத்துடன் தலையில் கையை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருக்கிறாள்]

ஆர்யாம்பாள்:—[துக்கத்துடன்] ஹே! ஜகதீசா! [பெருமூச்சு விட்டு] பெண் ஜன்மம் எடுத்தலே கொடிது. — சிறு வயது முதல் இதுவரையில் எனக்கு என்ன ஸுகத்தை அளித்தாய்! — ஒன்றுமில்லை — அப்பொழுதெல்லாம் குழந்தை இல்லை என்ற கவலை வருத்தியது!—இப்பொழுது சிறை வாசத்தினும் கொடிய இவ்வைதவ்யத்தை யளித்தாய் ஹா! தெய்வமே [தலையில் கைவைத்து அழுகிறாள்] — என்னை இக்கதிக்கு ஆளாக்கிவிட்டாயே! கருணைக்கடல் என்கிறார்களே உன்னை! வாஸ்தவமா? — இல்லை இல்லை [கோபத்துடன்] நீ கல் நெஞ்சம் படைத்தவன். அதனால் தான் உன்னைக் கல்லாகக் கோவில் தோறும் வைத்திருக்கிறார்களோ — கொஞ்சமும் இரக்கமில்லாதவன் — இன்னும் என்னை எப்படி யெல்லாம் ஆட்டிவைக்கவேண்டுமென்று எண்ணி யிருக்கிறாயோ! — ஹே தெய்வமே எல்லாம் உன்னிஷ்டப்படிதானே செய்வாய். [சங்கரனும் ஸஹபுத்தியும் வருகிறார்கள்]

சங்கரன்:—"பவதி பிக்ஷாம்தேஹி" அம்மா இந்தாருங்கள் மாதுகரி — என்ன! — அழுதீர்களா என்ன!— அம்மா.

ஆர்யா:—[சமாளித்து, கண்களைத் துடைத்துக்கொண்டு, சற்று புன்னகையுடன்] சங்கரா! கண்ணே! இப்படிவா — ஒன்றுமில்லை — நீ இருக்கையில் எனக்கென்ன குறை. இப்படிவா [மாதுகரியை வாங்கிக் கீழே வைத்துவிட்டு அணைத்து முத்தமிடுகிறாள்] கண்ணே! நீ எதற்கு இம்மாதிரி வெயிலில் போய் பிக்ஷை எடுக்கிறாய். நம் வீட்டில் ஒன்றும இல்லையா?

சங்க:—அம்மா. நம்மாத்தில் ஒன்றும் இல்லை என்றா நான் பிக்ஷைக்குப் போகிறேன்? இது பிரம்ம சர்ய தர்மம் அல்லவா? திரிகாலமும் சந்தியாவந்தனங்கள் செய்வதும் பிக்ஷை எடுப்பதும் குரு வீட்டிலேயே வசித்து வேதாத்யயனம் செய்வதும் அவருக்குத் தொண்டு செய்வதும், பகலில் தூங்காமையும்

தாம்பூலம் உண்ணுதிருத்தலும், ஸ்திரிகளோடு பேசாதிருப்பதும் இவைகளெல்லாம் ஒவ்வொரு பிரம்மசாரியின் கடமையன்றோ. உபநயன காலத்தில் இவ்விதம் வாக்குக் கொடுத்ததை நிறைவேற்ற வேண்டாமோ. இல்லாவிடில் பெரும் பாவமன்றோ என்னைச்சாரும்.

ஆர்யா:— கண்ணே! எங்கேயடா இவ்வளவையும் தெரிந்துகொண்டாய்.

ஸ்வபு:— அம்மா இன்றோடு குருகுல வாஸம் முடிந்துவிட்டதென்று குரு சொல்லிவிட்டார். இனிமேல் அவன் அங்கே போகவேண்டாம்.

ஆர்யா:—என்ன! சங்கரா! எல்லாவற்றையும் அதற்குள் கற்றுவிட்டாயா.

சங்க:— ஆம் அம்மா இவரிடம் நான்கு வேதங்களையும் நியாயம் தர்க்கம் முதலியவற்றை பூராவாகக் கற்றுவிட்டேன். இனி தகுந்த குருவைத் தேடி வேதாந்த பாடம் கேட்டு ஆத்ம வித்யா விசாரணை செய்யவேண்டும்.

ஆர்யா:— என்ன! வேதாந்தமா! இந்த பால்யத்திலேயா? இன்னும் பூராவாக உனக்கு எட்டு வயதுகூட முடியவில்லையே. — சரி — அதெல்லாம் பார்த்துக்கொள்வோம். எனக்கு ஒரு ஆசையுண்டு. உனக்கு தகுந்த இடத்தில் கல்யாணம் பண்ணி, அப்பா, — நீ ஒரே பிள்ளை — உனக்காவது நாலு குழந்தைகள் பிறந்து என் கண்ணுலே — என் கண் மூடுமுன் பார்க்க வேணும். கண்ணே! அப்போதான் என் குறை தீரும்.

சங்க:—அம்மா! என்னை நீ கல்யாணமா செய்துகொள்ள சொல்கிறாய்? ஊஹூம் — அப்படி நான் ஒரு போதும் செய்து கொள்ள மாட்டேன். [பாடுகிறார் அனுபந்தம் பார்க்க]

ஆர்யா:— அப்படி சொல்லக்கூடாது. சங்கரா — நீ என் செல்வனல்ல?

சங்க:—இல்லே அம்மா என்னைப் பிடிவாதம் செய்யாதீர்கள் — எனக்குக் கல்யாணம் வேண்டாம். அதில் என்ன ஸுகம் இருக்கிறது. அதனால் துன்பமே தவிர இன்பம் லவலேசமும் இல்லையே. ஞானிகளெல்லாம் அதை வெறுக்கிறார்களே. நான் ஸந்யாஸம் செய்துகொள்ளப் போகிறேன். எனக்கு உத்திரவு கொடுங்கள். இன்றைக்கே! இப்போதே!

ஆர்யா:— என்ன! நல்ல காரியம் செய்தாய்!— ரொம்ப நன்றாயிருக்கிறது. நான் உன்னை ரொம்ப புத்திசாலி என்று எண்ணிக்கொண்டிருந்தேன் ஓஹோ! இந்த துர்புத்தி யாரப்பா உனக்கு சொல்லிக்கொடுத்தார். இந்த வயதில் ஸன்யாஸம் செய்துகொள்வதாம் — நம் வம்சத்திலேயே ஒருவரும் அதுமாதிரி செய்யவே இல்லையே. உங்கப்பா செய்தாரா தாத்தாதான் செய்ததுண்டா? [கோபத்துடன்] — இந்த வார்த்தையை இனிமேல் சொல்லாதே என் கண்ணே.

சங்க:— அம்மா எப்படியும் எனக்கு விவாகம் செய்துகொள்ள விருப்பமே இல்லை — எனக்கு கல்யாணம் வேண்டவே வேண்டாம்.

ஆர்யா:—என்ன! என்ன சொல்கிறாய்? — இன்னும் உன் பிடிவாதத்தை விடமாட்டாயா? — சரி நான் இப்பொழுதே உன் காலின் முன்பு விழுந்து நாக்கைப் பிடுங்கிக்கொண்டு பிராணனை விட்டு விடுகிறேன். அதன் பிறகு உனக்கு எது இஷ்டமோ அப்படியே செய்துகொள். [முகத்தை கையில் மறைத்துக்கொண்டு அழுகிறாள்]

சங்க:—[தலையையும் கைகளையும் ஆட்டி] சரி, இருக்கட்டும். அம்மா [கிட்டே நெருங்கி, கையை விலக்கி] நான் விளையாட்டுக்காக அப்படிச் சொன்னேன் — இதற்காக கோபிக்கலாமா? ஏன் அழுகிறீர்கள். அம்மா [கண்களை துடைக்கிறான்] என்னை மன்னியுங்கள்.

ஆர்யா:—[முத்தமிட்டு] இப்பொழுதுதான் என் அருமைச் சங்கரன் நீ. — அப்படியில்லையப்பா — இந்தமாதிரி இனிமேல் ஒரு போதும் சொல்லாதே — ஸம்ஸார ஸுகமனுபவித்து — இரண்டு குழந்தை குட்டிகளைப்பெற்று, என் காலத்துக்கு பிறகு — உன் விருத்தாப்பியம் வந்த பிறகு வேணுமானால் செய்துகொள்ளேன்.

சங்க:—அதேப்படி முடியும் — முடியவே முடியாது. அது கிடக்கட்டும் அதை ஏன் சொல்கிறாய் விட்டுவிடு — அம்மா இன்றைக்கு ரதஸப்தமி — நாழியாச்சு — நான் நதிக்குப் போய் ஸ்நானம் பண்ணிவிட்டு வருகிறேன்.

ஆர்யா:—தினம், தினம்தான் நதிக்குப் போகிறாயே இன்னிக்கு ஆத்திலேயே ஸ்நானம் பண்ணிவிட்டு சீக்கிரம் சாப்பிடவா.

சங்கர:—இல்லையம்மா! — இன்று மட்டும் உத்திரவு கொடுங்கள்.

ஆர்யா:— நீ மட்டும் தனியாக போகக்கூடாது. துணைக்கு நானும் வரேன்.

சங்கர:—வேண்டாம் அம்மா. ஸ்புத்தனை அழைத்துக்கொண்டு போகிறேன் நீங்கள் சிரமப்படவேண்டாம். அங்கே இன்னும் அனேகம் பேர் ஸ்நானம் செய்ய வந்திருப்பார்கள். எனக்கு துணை வேண்டாம்.

ஆர்யா:—சிரம மொன்றுமில்லை நானும் வருகிறேன்.

சங்கர:— அப்படியானால் சரி வாருங்கள். [மூவரும் செல்கின்றனர்]

---

## அங்கம் 2

### காட்சி 3.

[நீலகண்ட சாஸ்திரி வீடு. மீனாக்ஷி முகத்தை கோபமாக வைத்துக்கொண்டு ஒரு புறம் உட்கார்ந்திருக்கிறாள். சாஸ்திரி கச்சத்தை தூக்கிச்சொருகி, நூல் நூற்றுக்கொண்டே உலாவுகிறார்.]

நீல:—என்னடி என்ன! வரவர, உனக்கு வாய் ஜாஸ்தியா போச்சு. நான் எது சொன்னாலும் எதிர்த்து, எதிர்த்து சொல்லிக்கிண்டே இருந்தா என்ன அர்த்தம்?

மீனாக்ஷி:— அதெல்லாம் முடியாது. நான் கண்டிப்பா போகத்தான் வேணும்.

நீல:—இந்த சமயம்தான் போகக்கூடாதுங்கரேனே — போனால் அப்படியே போகவேண்டியதுதான் — நல்லதா போச்சு. நீ தொலைஞ்சா நானும் ஸன்யாஸம் வாங்கிண்டு இப்படீ எங்கேயாவது போறேன்.

மீனாக்ஷி:— என்ன! இப்படி யெல்லாம் சொன்னால் நான் பயப்பட்டுவிடுவேன்னு பார்க்கிறேள் — ஹூம்—சன்யாஸம் வாங்கிக்கிற அசாமியைப் பாக்கல்லே! — என்ன நீங்களும் அவாத்து சங்கரன்னு நினைச்சுண்டுட்டேளோ! —

நீல:— என்ன பிரமாதம்! என்ன பெரிய கார்யம் சங்கரன் பண்ணிவிட்டான். இப்படி ஊர் சுத்தலாம்னு அம்மா சொன்னத்தை கேக்காமே, அவளை வயசான காலத்திலே தனியா விட்டுட்டு போயிட்டானே ஆஹா!

மீனாக்ஷி—அப்படி சொன்னேளோ நமக்கு துளி அன்னம் கூட கிடைக்காது. ஆஹா! அவனுக்கு ஏற்பட்ட விரக்தி மாதிரி யாருக்கு ஏற்படும் சின்னஞ் சிறு வயஸிலே! ஆர்யாம்பாள் தடுத்தாளேன்னு என்ன யுக்தி பண்ணினான் தெரியுமோ அவன்?

நீல:—என்ன! என்ன!!

மீனாக்ஷி:—நானும் அன்னிக்கி மத்தியானம் ஆத்தங்கரைக்கு ஸ்நானத்துக்கு போனேன். நீங்கள் அனந்து வாத்துக்கு போயிட்டேள். கேளுங்கோ! ஆர்யாம்பாள், சங்கரன், ஸபுத்தி எல்லோரும் தான் வந்திருந்தா. என்பக்கத்திலே தான் இறங்கி ஸ்நானம் பண்ணினான். நம்ம சூர்ணி நதியிலே ஏதாவது எப்போவாவது முதலே என்று கேட்டுருக்கோமோ! எங்கேருந்துதான் வந்துதோ தெரியல்லே—ஒரு முதலே—அவனைப் பிடிச்சுண்டுடுத்து. என்ன பண்றது. எங்களாலே ஆன மட்டும் பார்த்தோம் விடுவிக்க முடியல்லே. இத்தனைக்கும் சங்கரன் கண்ணுலே துளி ஜலம் வரணுமே. ஹான்னுகூட சத்தம்! ஒண்ணுகிடையாது. என்ன சொன்னான் தெரியுமோ. அம்பாவோ ரொம்ப அழ ஆரம்பிச்சுட்டா.

நீல:—அன்னிக்கே ஜோஸ்யர் சொன்னார். அவனுக்கு அற்பாயுஸுன்னு — உம் — அப்புறம்.

மீனாக்ஷி:—உடனே அவன் அம்மா! நான் இன்னமே பிழைக்க மாட்டேன் என்பது நிச்சயம். எனக்கு துர்மரணம் ஏற்படும். நீங்க ஸன்யாஸம் எடுத்துக்க இப்போவாவது உத்திரவு கொடுங்கோ. நான் செத்துப்போனாலும் புண்யம் உண்டு. ஒரு சமயம் புனர்ஜன்மம்வந்து நான் பிழைத்தாலும் பிழைப்பேன். சன்யாசம் பெற்று செத்தால் மறுஜன்மம் கிடையாது. எனக்கும் உங்களுக்கும் போகிற வழிக்குப் புண்யமுண்டு. என்று சொன்னான்.

நீல:—என்ன யுக்தி பார்த்தாயா? ஹூம் புத்திசாலிடி அவன்!

மீனாக்ஷி:—அம்பா என்ன செய்வாள்! ஒன்றும் சொல்லத் தெரியல்லே. சரி, உனக்குத் தோன்றியதைச் செய் என்றாள். சொன்னதுதான் தாமஸம். உடனே முதலே யும் இல்லே ஒண்ணும் இல்லே. நான்மட்டும் அப்பவே ஸந் தேகப்பட்டேன். முதலே எப்படி வந்ததுன்னு. மேலே — ஹாஹா ஹாஹாவாம் ஒருகந்தர்வன் என்னமோ ஸம்ஸ்கிரு தத்தில் ஏதோ ஒளறிட்டு மறைஞ்சுட்டான்.

[ஸுபுத்தி அவஸரமாக வருகிறான்.]

ஸுபுத்தி:—மாமா! மாமா! எனக்கு சீக்கிரம் நல்லதா ஒரு நாள் பார்த்து சொல்லுங்கோளேன்.

நீல:—என்னடா பயலே நாள்? எதுக்குடா?

மீனாக்ஷி:—என்னடா ஸுபுத்தி? என்ன உடம்பு நோக்கு? — ஏன் மூஞ்சியெல்லாம் உப்பி இருக்கு? அழுதாயா என்ன?

ஸு:—[கண்ணில் நீர் ததும்ப] இல்லே அம்மாமி. எங்க சங்கரன் போனத்துக்கு அப்புறம் — எனக்கு இருக்கவே பிடிக்கல்லே நானும் இப்பவே கிளம்பிபோப்போறேன் [அழுகிறான்] அதற்குத்தான் மாமா நாள் பார்த்து சொல்லுங்கோங்கறேன்.

நீல:—என்னடா பைத்தியம்? எங்கே போகப்போறே. [பஞ்சாங் கத்தை எடுத்து புறட்டுகிறார்]

மீனாக்ஷி:—அம்மாமி ஆத்திலே என்ன பண்றாள்?

ஸு:—அதை யேன் கேக்கறேள்? அஞ்சு நாளாய் சாப்பிடவே இல்லே. அழுதுண்டே படுத்துண்டிருக்கா.

மீனாக்ஷி:—பாவம்! அவள் என்ன பண்ணுவாள். — ஏண்டா சங்கரன் எப்போ திரும்பி வருவான்? எங்கே போயிருக்கான்.

ஸு:—எங்கே போயிருக்கானோ தெரியல்லே. அம்மா அவன் கிளம்பி போறச்சே ரொம்ப அழுதாள். போகவிடமாட் டேன்னு பிடிவாதம் பண்ணினாள். அப்போ அவளுக்கு காதுலே ஞானோபதேசம் செய்து, அந்த்யகாலத்தில் வந்து தன் கையாலேயே நெருப்பு போடரேன்னு உறுதி சொல் விட்டு, எல்லா சொத்தையும் மாமா முதலியவர்களே கூப்பிட்டு தாயாரை சரிவாக் கவனித்துக்கொள்ள ஏற்பாடு பண்ணிட்டு போய்விட்டான். மாமா — நான் என்ன பண்ணுவேன்?

மீனாக்ஷி:—நீ இப்போ எங்கே போப்போரே?

ஸு:—எங்கிட்டே வந்தான். நான் அழுதேன் என்னை சமாதானம் பண்ணி காசிக்கு வந்து என்னைப் பாருன்னு சொன்னான் நான் அங்கேதான் போறேன். நானும் — சந்யாஸியாயிடப் போறேன். அவனோடேயே இருக்கப்போறேன்.

நீல:—[பஞ்சாங்கத்தை வைத்துவிட்டு] எங்கே! — காசிக்கா! — சன்யாஸமா! — என்னடா சிறு பசங்களெல்லாம் சன்யாஸியாரேங்கிறது. அநியாயமான்னாயிருக்கு!

ஸு:—மாமா நாள் பார்த்துட்டேளா? என்னிக்கி தேவலை?

நீல:—நாளைக்கி காலையிலே ரொம்ப நன்னாயிருக்கு.

ஸு:—சரி, நான் வரட்டுமா? நாளைக்கு காலையிலே கிளம்பப் போறேன். [போக எழுந்திருக்கிறான்]

நீல:—ஏய்! பயலே! நானும் காசிக்கு வரேண்டா! [மனைவியைப் பார்த்து அடியே! வரட்டுமாடி இப்போ என்ன சொல்றேன் னேன்?]

மீனாக்ஷி:—ஏது! நீங்க சித்தமின்னாடி சொன்னதை நிஜமா செஞ்சுடுவேள் போலேயிருக்கே. நான் ஒண்ணும் ஊருக்குப் போகல்லே. ஆத்தைவிட்டு எங்கேயும் போகப்படாது. ஸுபுத்தி! — நீ சௌக்யமா போயிட்டுவா. சங்கரனை நான் ரொம்ப கேட்டேன்னு சொல்லு. [ஸுபுத்தி போகிறான்.]

நீல:—ஏண்டி நான் உன்னை வழிக்கு கொண்டுவந்துட்டேன் பார்த்தியா? [சிரிக்கிறார்] நான் உன்னை விட்டுவிட்டு எப்போ வாவது போவேனா. [கையைப் பிடித்து முத்தமிடுகிறார்]

மீனாக்ஷி:—ரொம்ப நன்னாயிருக்கு. எனக்குத்தான் அப்போதே தெரியுமே. [சிரிக்கிறார்கள்]

---

## அங்கம் 2.

### காட்சி 4.

[நர்மதா நதிக்கரையில், ஆலமரத்தினடியில் கோவிந்த பகவத் பாதரும் இரண்டு சிஷ்யர்களும் உட்கார்ந்து கொண்டிருக்கிறார்கள்.]

கோவி:—[கண்ணை மூடிக்கொண்டு நிஷ்டையில் இருக்கிறார்.]

சிஷ்யர்கள்:— ப்ரம்மானந்தம் பரமஸுகதம் கேவலம் ஞானமூர்த்திம்
த்வந்த்வா தீதம் ககன ஸத்ருசம் தத்வமஸ்யாதிலக்ஷ்யம்
ஏகம் நித்யம் விமலமசலம் ஸர்வதீஸாக்ஷி பூதம்
பாவாதீதம் திரிகுண ரஹிதம் ஸத்குரும் தம் நமாமி.
[பாடுகிறார்கள்]

கோவி:—நாராயண நாராயண நேற்று ஸமாதி காலத்தில் உதயத்தில் வரும் சிஷ்யனுக்கு ஸன்யாஸதீக்ஷை கொடுக்கும்படி வ்யாஸ பகவானால் உத்திரவிடப்பட்டேன். இன்னும் ஒருவரையும் காணோமே. [இதற்குள் சங்கரன் பாட்டு சப்தம் காதில் கேட்கிறது.] நாழிகையும் 10 ஆச்சுது. — சிஷ்யர்காள்! சற்று இருங்கள். என்ன குரல் அது — ஆஹா என்ன இனிமையான கானம். [சங்கரர் வருகிறார்.]

சங்க:—[பாடிக்கொண்டே வருகிறார்]

கஸ்த்வம் கோஹம் குத ஆயாத: காமே ஜனனீ கோமே தாத:
இதிபரிபாவயஸர்வ மஸாரம் விச்வம்த்யக்த்வாஸ்வப்னவிசாரம்.
பஜகோவிந்தம், பஜகோவிந்தம், பஜகோவிந்தம் மூடமதே.
[திரும்பி கோவிந்த பூஜ்யரைப் பார்த்து வணங்குகிறார்.]

கோவி:—நாராயண, நாராயண, அப்பா நீ யார் எங்குவந்தாய். உன் இச்சை என்ன? இவ்வதி பால்யத்தில்?

சங்க:—ஸத்குரோ! இந்த சரீரத்திற்கு சங்கரர் என்ன நாமதேயம். நான் சதுர்த்தாச்சிரமம் பெற இச்சைப்படுகிறேன். உத்தம குருவைத்தேடி தங்கள் சரணாரவிந்தங்களை யடைந்தேன். கிருபை செய்து எனக்கு சன்யாஸ தீக்ஷையருள வேண்டும்.

கோவி:—[சிரித்து] அப்பா! குழந்தாய்! போகாதிகள் செய்து இந்திரியங்களுக்கு சாந்தி உண்டாகாத பக்ஷத்தில் வைராக்யம் உண்டாகி சித்தம் நிலைப்படாதே. உனக்கு தீக்ஷை செய்து கொள்ளப் போதுமான வயது இன்னும் வரவில்லையே.

சங்க:—ப்ரபோ! ஞானஸித்தியடைய வயக்கிரமமும் தேவையோ? வாமதேவர் கர்ப்பத்திலிருந்தே ஞானியாகவில்லையா? சுகாசாரியார் பிறக்கும்பொழுதே ஞானியாக இல்லையா? வயதுக்கும், இல்லறத்துக்கும், ஞானஸித்திக்கும் யாதொருவிதமான சம்பந்தமும் கிடையாதே! தங்களுக்குத் தெரியாததொன்

றுண்டோ. அவ்விஷயங்களில் பயம் ஏற்படினும் தங்கள் கிருபை யிருக்குமாயின் அவைபறந்தோடிப் போகாதோ.

கோவி:—[சற்று கண்ணைமூடித்திறந்து] நீ யாரென்றறிந்தேன் இப்பொழுது. உனக்கு உபதேசமே செய்ய வேண்டிய அவசியமே கிடையாதாயினும் லோகமரியாதையை உத்தேசித்து அதைச்செய்கிறேன். சங்கரா! நீ சென்று முண்டனம் செய்து கொண்டு, நர்மதையில் நீராடி இங்காவி வஸ்திரத்தை தரித்துவா.

சங்க:—[வஸ்திரத்தை வாங்கிக்கொண்டு] ஆக்ஞைப்படி. [செல்கிறார்]

சிஷ்யன்:—குரோ! யார் இவர்! இந்த பால்யவயதில் சன்யாஸ தீக்ஷைபெற வந்திருக்கிறார்.

கோவி:—சிஷ்யர்ககள்! ஆஹா! இன்றே என் ஆத்மா சாந்தியடைகிறது. — இப்பேர்ப்பட்டவரை சிஷ்யராக அடையும் பாக்யம் பெற்றேனே! இவர் சாக்ஷாத் ஸ்ரீ சங்கரரே. — ஆஹா! முன்பு நானும் இதே விருக்ஷத்தின் கீழ்தான் உபதேசம் பெற்றேன். இப்போதும் உபதேசிக்கப்போகிறேன்.

[சங்கரர் காவி வஸ்திரம் தரித்து பிரவேசம்]

சங்க:—[நமஸ்கரிக்கிறார்]குரோ.

கோவி:—சங்கரா இப்படி சமீபத்தில் உட்கார். [உட்கார்கிறார்.] இத்தண்டத்தைப் பிடித்துக்கொள். வலது காதைக் காட்டு. [கிட்டே நெருங்கி] "நாராயண நாராயண" நீ எப்போதும் இந்தமந்திரத்தையே ஸ்மரிக்கவேணும். நீர் இன்றுமுதல் நம் சிஷ்யராகிவிட்டீர்.

சங்க:—"தன்யோஸ்மி" நாராயண. நாராயண, நாராயண. [உரக்க]

கோவி:—இந்த ஆசிரமத்தின் தர்மம் சொல்லுகிறேன் கேளும். ஒரு கிருமத்தில் மூன்று ராத்திரிக்குமேல் தங்கக்கூடாது. அபாத்ரர்களிடம் பிக்ஷைக்கு போகக்கூடாது. ரஜஸ்வலா ஸ்திரீகள் கண்ணில்பட்டால் அன்று பட்டினி கிடக்கவேண்டும். திரவ்ய ஸஞ்சயம் செய்யக்கூடாது. சாதுர்மாத காலத்தில் நான்குபக்ஷம் ஓரிடத்தில் வசிக்க வேண்டும். அப்போது தீர்த்த யாத்திரை செய்யலாகாது.

சங்க:—குரோ! ஆக்ஞைப்படி. அப்படியே செய்கிறேன்.

கோவி:—இனி நம் குரு பரம்பரையையும் நீ செய்ய வேண்டிய கார்யங்களையும் சொல்கிறேன் கேளும்.

நாருயணன் பிரமன் ஞானவசிட்டன் சக்தி
பேரார் பராசரனும் பேசும் வியாதனிந்தப்
பாரார் சுகர் கௌட பாதரிறுதியர்
யேரார் பறையாயெய்து பதேசமிதுகாண்
நாலுமூலா நாயகரான்மறையின் வாக்கியத்தை
யேல வுபதேசித்தே யிப்பர தகண்டத்தி
ஞலு திக்கிஞாய நாட்டி யவைகட்குச்
சால வொவ்வோர் வாக்கியத்தைச் சாற்றியறஞ் சாற்றுவிப்பாய்

சரி, நீர் சாக்ஷாத் ஸ்ரீ சங்கரரின் அவதாரம், சுத்தாத்வைத ஞானத்தைப் பரவச் செய்ய வந்திருக்கிறீர் என்பதை அறிந்தேன். என்னுல் செய்யவேண்டியதையும் செய்து விட்டேன். நீர் வாராணஸீ சென்று பாஷ்யமியற்றவேண்டும்.

சங்கர:—ப்ரபோ! ஸர்வக்ஞான தாங்கள் அறியாததும் உண்டோ ஸத்குரோ! இந்தக் கைகளால் சில தினங்கள் தங்களுக்கு குருஸேவை செய்ய இச்சைப்படுகிறேன். ஆக்ஞை செய்ய வேணும்.

கோ:—சரி. மாத்யான்ஹிக காலம் நெருங்கிவிட்டது. வாருங்கள் நர்மதை நதி செல்வோம். "நாருயண" [சொல்லிக்கொண்டே எல்லோரும் போகிருர்கள்]

---

## அங்கம் 3.

### காட்சி 1.

[காசி க்ஷேத்திரம். முக்தி மண்டபத்தில் சங்கரரும், பத்ம பாதர், ஆனந்தகிரி முதலிய சிஷ்யர்களும் இருக்கின்றனர். சிஷ்யர்கள் பாடம் சொல்லிக்கொண்டிருத்தல்]

சங்கர:—

ராகம் மால்கோஸ் தாளம் திரிபுடை

நமோ ஜன்ஹு கன்யே த்வதன்யை நமன்யே
நிஸர்கேந்து சின்ஹா திபிர்லோகபர்த்து: —நமோ
அதோஹம் நதோஹம் ஸதாகௌர தோயே
வசிஷ்டாதிபிர்கேய மாஞபிதாயே. —நமோ

சிஷ்யர்காள்! ஸூத்ர பாஷ்யங்கள் இயற்றி முடித்தோம் இனி ஆனந்த வடிவமான ஆத்மாவின் ரூப லக்ஷணத்தை உணர்த்த வேண்டும். இதற்கு ஈசனருள் இன்றியமையாதது முக்தி நெறிக்கு பக்தி நெறி தவிர வேறு வழியில்லை. ஸ்ரீ விச்வேச்வரரை தரிசித்துவருவோம் வாருங்கள். [எல்லோரும் எழுந்து செல்கிறார்கள். ஒவ்வொருவரும் ஒவ்வொரு அடி பாடுகிறார்கள்.]

தாளம் கண்டஜாதி ஏகம் ராக மாலிகா

சங்த:— நமஸ்தே நமஸ்தே விபோ விச்வ மூர்த்தே.
பத்ம:— நமஸ்தே நமஸ்தே சிதாநந்த மூர்த்தே
ஆன:— நமஸ்தே நமஸ்தே தபோ யோக கம்ய
[மூவரும்] நமஸ்தே நமஸ்தே நமஸ்தே
[சங்கரர் தனிமையாக] தோகையறு [ராகம் ப்யாக்]

சம்போ மஹேச கருணாலய சூலபாணே
கௌரீபதே பசுபதே பசுபாச நாசின்
காசீபதே கருணயா ஜகதேக தேக:
த்வம் ஹம்வி பாவி விததாவி மஹேச்வரோவி.

சங்:— சிவா காந்தசம்போ சசாங் கார்த்த மௌளே
பத்ம.—மஹேசான சூலின் ஜடா ஜூடதாரீ
ஆன:—த்வமேகோ ஜகத்வ்யாபகோ விசுவரூப
[மூவரும்] ப்ரஸீத ப்ரஸீத ப்ரபோ பூர்ணரூப [பாடிக்கொண்டே மெதுவாக செல்லுகிறார்கள்]

[எதிரில் கட் குடித்த வெறியால் ஆடிக்கொண்டு, கையில் ஒரு கலயத்துடன் பாடிக்கொண்டே சண்டாளன் வருகிறான்]

சண்டா:—[பாடுகிறான்]

கள்ளு குடிக்கவேணும், கன்றுகுட்டி உரிக்கவேணும்
கங்கையிலே முழுகவேணும், தங்கரெத்தினமே
காலங் கடத்தவேணும், பொன்னுரெத்தினமே.

[சங்கரர், சிஷ்யர்கள் கண்டு அருவருப்புக்கொள்ளுகிறார்கள்.]

பத்ம:—அடே பறையா! விலகிப் போ.

சண்:—[ஆடி விழுந்து] யாரைப் போச்சொல்றே சாமி! என்னேயா? நீங்க யாருங்க? என்னே எட்டிப்போங்கரத்துக்கு.

ஆன:—குடிவெறியோ? அடே! நிலே தெரியவில்லேயோ?

சண்:—எந்த நிலே சாமி — எனக்கா? உங்களுக்கா.

சங்கர:—நீ யாரப்பா

சண்:—நான்? என்னைத் தெரியாதுங்களா — நான்தான் சாமி — நான் யாருங்க? என்னையா கேக்கிறீங்க? இந்த சடலத்தையா — நீங்க யாருங்க?

சங்க:—என்னடா பிதற்றுகிறாய்? நாங்கள் சன்யாஸிகள். சாமியார் என்று எல்லோரும் சொல்வார்கள்.

சண்:—சாமி — யாரு — எங்கா சாதிக்காரங்களா? — ஓகோ! — அப்போ நான் யாரு சொல்லுங்களேன் — பாக்கலாம். [இதற்குள் பத்மபாதரும், ஆனந்தகிரியும் ஒரு புரம் தனிமையாக]

பத்ம:—இவன் சாதாரணச் சண்டாளனல்லவே அல்ல. நிச்சயம். இல்லாவிட்டால் இப்படிப் பேசவேமாட்டான். இருக்கட்டும்.

ஆன:—ஏன்? பறையனில் உயர்ந்தவனாயிருக்கக்கூடாதோ?

பத்ம:—ஜாதி பிறப்பிலே என்ன இருக்கிறது?

ஆன:—கொஞ்சம் பொறும். என்னென்னமோ வேதாந்தமெல்லாம் பேசுகின்றான். பார்ப்போம்.

சங்க:—அடே நீசா! நான் உன் கூட வாதாடவில்லை எட்டிப்போ?

சண்:—என்னசாமி கோவிச்சுக்கிறீங்க. எளம் பிள்ளையாட்டம் இருக்கு. இந்த வயதுலே காயாஷம். என்னையேன் எட்டிப் போவ சொல்றீங்க. நீங்கதான் சாமியாராச்சே! சாமியாருக்குக்கூட சாதி உண்டா?

சங்க:—அப்பா! உடம்பு ஒவ்வொருவருக்கும் தனித்தனி இருக்குமளவும் அவரவர் பிறப்புப்படி ஏற்றத்தாழ்வு உலக மரியாதைக்கென்று ஏற்பட்டிருக்கிறதே. அதை மாற்றலாகாதே.

சண்:—அப்போன்னு போ, போங்கிறீங்களே! ஏன் உடம்பைத்தானே. என்னையா அல்லது என் சாதியையா?

சங்க:—உன் சாதி, உடம்பு, உயிர் இவற்றை பிரிக்க முடியுமோ?

சண்:—அப்பொன்னு என் சாதியை நான் விட்டுர்ரேன் சாமி.

சங்க:—அது கூடாத காரியமாயிற்றே

சண்:—என்சாமி! இருக்கட்டும். கங்கெ தண்ணியே கலயத்லே எடுத்தா அந்த தண்ணி கள்ளாய்டுமோ? தண்ணி அந்த கங்கெ தண்ணிதானே. என்னைப்படெச்ச சாமிதானே ஒங்களையும்

படைச்சிருக்காரு. எந்த சாதியானாலும் ஒங்களாதிரி நானும் மனிசன்தானே. எஞ்சாமி இந்த வித்தாசமெல்லாம்?

சங்க:—கலயத்தில் இருக்கும் தண்ணீர் அதில் இருக்குமட்டும் கலயத்து தண்ணீர்தானே. கங்கை தண்ணீர் என்று எப்படி ஆகும். கலயத்துள்ளிருக்கு மட்டும் அது கள் என்று கொள்வது உலக இயல்புதானே.

சண்:—நிசத்தை நன்னா ரோஷணைபண்ணி பாத்து தெரிஞ்சுகிட்டா? பாருங்க சாமி எங்கிட்டே, ஒங்ககிட்டே, இவங்ககிட்டே யெல்லாம் ஒரே உயிர்தானே இருக்கு. கலயத்துலே கங்கை தண்ணிதான் இருக்குன்னு தெரிஞ்சுகிட்டா வித்தாசம் ஓடிப்போயிடாதா?

சங்க—ஆஹா! ஜாதி என்பது பிறப்பினால் உண்டாவது. அதனால் ஏற்படும் உயர்வு, தாழ்வு எல்லாம் உடலைப்பற்றியதே. எங்கும் நிறைந்து ஏகமாயிருக்கும் சுத்தமான ஆத்ம ஸ்வரூபத்திற்கும் சரீரத்திற்கும் கொஞ்சமேனும் சம்பந்தமில்லை. ஆத்மீகமாகப் பார்க்கின் எல்லாம் ஒன்றே. அதுவே பலவாறாகத்தோன்று கிறது. இவ்வித ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டவன் சண்டாளனாயினும் சரி, மற்றும் யாராயினும் சரி அவனே ஞானி. அவனே என் குரு. இதுவே எனது துணிபு. [நமஸ்கரிக்கிறார். எல்லா சிஷ்யர்களும் நமஸ்கரிக்கின்றனர் சண்டாளன் மறைந்து விச்வேச்வரர் பிரத்யக்ஷமாதல்.]

விச்வே:—ஹே! சங்கரா! நீ என் ஸ்வரூபமே. உனக்கு ஆத்ம ஞானம் அனுபவத்தில் வந்திருக்கிறதா என்று பரீக்ஷிக்கவே இங்ஙனம் செய்தனம். சந்தோஷம். வேதத்தின் கருத்தை மக்கள் யாவரும் உய்யுமாறு ஸ்ரீவ்யாஸ ஸூத்திரங்களுக்கும், உபநிடதங்களுக்கும் மூடர்கள் குதர்க்க அர்த்தம் செய்திருப்பதைக் கண்டித்துச் சரியான பாஷ்யம் இயற்றி, சாதுக்களுக்கு போதித்து, மஹா கர்மடர்களையும் த்வைதவாதிகளையும் ஜயித்து சுத்த அத்வைத ஞான மார்க்கத்தை நிலைநாட்டுவாயாக. இதோ நாம் கைலாசமிருந்து கொணர்ந்த இந்த ஐந்து லிங்கங்களில் நாலு திக்குகளிலும் நான்கையும் ஸ்தாபித்து உமது ஆத்ம பூஜைக்கு யோக லிங்கத்தை வைத்துக்கொண்டு தர்மத்தை நிலைநாட்டி ஸ்வஸ்தானம் வந்து சேரும். [விச்வேச்வரர் மறைதல்]

சங்க:— [கைகூப்பி] பாடுகிறார்.

ராகம் கல்யாணி. தாளம் சாபு.

மகாதேவ நமோ — நமோ
சுகானந்த பரிபூரண சிவசுந்தர கருணானந்த பவஹர, — மகா
அரியயன் தேடிக்காணாத பாதம் அந்தி மதிசூடி
பெரிய புரமுட்ட எரியூ அனலிட்ட
பெண் கொடி கலந்த தன் முடியணிந்த — மகா
சதிவினைகள் தீர கஜமுகனை தந்த உபகாரா
அமரர் தொழவைத்த குமரனை அளித்த காலனுடல் சாய
— காமனும் மாய கருணைபுரி நேயா —ஆலமமுதுண்ட
மூல முதலென்ற அன்பர்க்கருள் செய்த சம்போ நீலகண்ட —
மகா

---

## அங்கம் 3.

### காட்சி 2.

[ஆர்யாம்பாள் ஒரு பலகையில் ரொம்பவும் சீக்குடன் படுத்துக்கொண்டிருக்கிறாள். பக்கத்தில் மீனாக்ஷி உட்கார்ந்து தேறுதல் சொல்லிக்கொண்டிருக்கிறாள்.]

ஆர்யா:—ஹா தெய்வமே! என்னை ஏன் இப்படிக் கஷ்டப்படுத்துகிறாய்! என்னால் ஸஹிக்க முடியவில்லையே. [புரளுகிறாள்] ஹா! சங்கரா! சங்கரா! — குழந்தாய் உன்னை எப்பொழுதடா காண்பேன். — நீ எங்கே இருக்கிறாயோ! — என்ன செய்கிறாயோ! — உன் வ்ருத்தாந்தம் ஒன்றுமே தெரியவில்லையே. — நான் இறப்பதற்குமுன் உன்னை ஒரு முறையாவது கண்ணால் காண்பேனோடா! நான் யாருமற்ற பாவியானேனே. ஹே ஈசுவரா! ஆபத்பாந்தவா! அனாதரக்ஷகா!

மீனாக்ஷி:— அம்மாமி, ரொம்ப அலற்றிக் கொள்ளாதேங்கோ — பேசாமே சித்த நாழி கண்ணை மூடிண்டு தூங்குங்கோ — நீங்களும் இந்த எட்டு வருஷமாத்தான் கதறுறேளே — என்ன பிரயோஜனம் — கொஞ்சம் பேசாமே இருங்கோ.— தலைவலி இப்போ எப்படி இருக்கு? — உம் —

ஆர்யா:—என்னடி மீனாக்ஷி — என் வலியெல்லாம் என் கட்டை யோடேதான் போகும். சங்கரன் என்னை இப்படி விட்டுட்டு போன வலிதான் பெரிய வலியாயிருக்கு.— ஹா —சங்கரா! [தலையை பிடித்துக்கொள்கிருள்]

மீனாக்ஷி:—நான் என்ன சொன்னாலும் கேக்கமாட்டேங்களே. மறுபடியும், அதை சொல்லிண்டே இருந்தா போன சங்கரன் திரும்பி உடனே வந்துடப்போரானா? அவனைப்பற்றி நீங்க கவலைப்பட்டு என்ன ஆகப்போறது. சௌக்யமா இருக்கணும்னு ஸ்வாமியை வேண்டிக்குங்கோ — அடாடா! இந்த ஸுபுத்தன் தான் இருந்தானே! பேசாமே — கிருஷ்ணன்னு இங்கே கூப்பிட்ற குரலை கேட்டுண்டு இருக்கப்படாதோ. ஆனமட்டும் சொன்னேன். — பைத்தியம் — அவனும் காசிக்கு போய்விட்டான்.

ஆர்யா:—மீனாக்ஷி! நீ என்ன சமாதானம் பண்ணினாலும் என் மனசு கேக்கமாட்டேங்கறதே! — நீயே என் ஸ்திதியிலே இருந்தா எப்படி இருப்பேன்னு கொஞ்சம் யோஜனை பண்ணிப்பாரு— எனக்கு இந்த லோகத்திலே என்ன சுகம் — நான் பாவி — என் பாவத்திற்கு நான் அனுபவிக்கிறேன். [அழுகிருள்]

மீனாக்ஷி:—அழாதேங்கோ அம்மாமி! இன்னும் உங்களுக்குத்தான் கஷ்டம். [ஸுபுத்தன் கையில் ஒரு மூட்டையுடன் வருகிருன்] அடே! யாரது—ஸுபுத்தா! எங்கேருந்துடா வறே? காசிக்கு போயிட்டு வந்துட்டியோ?

ஆர்யா:—ஸுபுத்தா! ஸுபுத்தா! நம்ப சங்கரனை கண்டயோடா?

ஸுபு:—[மூட்டையை வைத்துவிட்டு இருவரையும் நமஸ்கரித்து] பார்த்தேன் சங்கரனை. பார்த்தேன். நன்னா சௌக்யமாக இருக்கான். இப்பத்தான் காசிலேந்து வரேன்.

ஆர்யா:—அப்பாடா! குழந்தை திடமா இருக்கானா! [மெதுவாக எழுந்து உட்காருகிருள்]

மீனாக்ஷி:—ஸுபுத்தா! இப்போதாண்டா உன்னைப்பத்தி பேசிண்டிருந்தேன். உனக்கு நூறு வயசு. — உம்—என்ன விசேஷ சமாசாரம்? சொல்லு சீக்கிரம்.

ஸுப்பு:— அம்மா! நீங்க நெனச்சேள் என்னே. நான் வந்துட்டேன் இருக்கட்டும். தங்களுக்கு என்ன உடம்பு ஏன்? ரொம்ப இளேச்சுப் போயிட்டேளே! இப்படி! — ஹும் —

ஆர்யா:—ஒண்ணுமில்லேடா அப்பா. உன்னையாவது இப்போ பார்த்தேனே. என் சங்கரனைப் பார்த்தாப்லே இருக்கு இப்போ! — என்னடா சொன்னுன் அவன்?

ஸுப்பு:—அதையா கேக்கரேள். அதைத்தான் நானும் சொல்ரத்துக்கு வந்திருக்கேன். சங்கரன் இங்கேருந்து நேரே போனும். ஐயையோ! பெரிய தப்புபண்ணிவிட்டேனே. [கன்னத்தில் அடித்துக்கொண்டு] போனாளாம். சங்கரன் இப்போ ரொம்ப பெரியவாளாய் போயிட்டாள். போய் அங்கே ஒரு பெரிய மஹான் இருக்காராம். அவர் பேர் — உம் — கோவிந்த பகவத்பாதராம். அவர்கிட்டே சன்யாஸ தீக்ஷை வாங்கிண்டு கொஞ்ச நாளைக்கு அங்கேயே இருந்தாளாம். அப்போ—அம்மா! —அவர் பெரிய பெரிய கார்யம் எல்லாம் பண்ணிருக்கார். ஒரு நாளைக்கி நர்மதை நதியிலே பெரிய வெள்ளம் வந்து எல்லாத்தையும் அடிச்சுண்டு போச்சாம். நம்ப சங்கரன் போய் சிவசிவா [மறுபடி கன்னத்திலே அடித்துக்கொண்டு] சுவாமிகள்போய் கமண்டலத்துக்குள்ளே பிடிச்சு அடைச்சாளாம். உடனே வெள்ளம் இருந்த இடம் தெரியாதே போச்சாம். கேட்டேளா.—

மீனாக்ஷி:—என்ன ஆச்சரியம்! நிஜந்தானு?

ஸுப்பு:—அடாடா! — எத்தனை சிஷ்யர்கள்! — என்ன ஆசாரம்! அம்மாமி அவர் யோகபலத்தைபத்தி எல்லாரும் சொல்ரு, சொல்ரு, அப்படியே சொல்ரு. எனக்குகூட சொல்லத் தெரியல்லே போங்கோ.

ஆர்யா:—ஆஹா! இதைக்கேட்க எனக்கு என்ன ஆனந்தம் உண்டாகிறது! என் சங்கரனுக்கு தெரியாத விஷயமும் உண்டோ அவன் எனக்குமட்டுமா? இந்த உலகத்திற்கே பிள்ளையாக பிறந்திருக்கிறுன்.

மீனாக்ஷி:—எங்காத்துக்காரும் அப்படியேதான் சொன்னரே. அவன் ரொம்ப புத்திசாலின்னு.

ஸ்பு:—அப்புறம் குருவின் கட்டளைப்படி காசிக்குப்போய் பல சிஷ்யர்களை முக்தி மண்டபத்தில் சேர்த்துண்டு வேதாந்த உபநிஷத்துக்களுக்கு பாஷ்யம் செய்து சாக்ஷாத் ஸ்ரீவ்யாசர் அனுக்ரஹம் பெற்றூரும்! — இங்கே ஆபத்ஸன்யாஸம் வாங்கிண்டதாலே இன்னும் 8 வயது கூட வந்ததா! — அதுவும் போருதுன்னு வ்யாஸர் வேரே இன்னும் பதினாறு வயசு உயிரோடிருன்னு வரன் கொடுத்துட்டுப் போனூரும்.

மீனாக்ஷி:—போாது! குழந்தை தீர்க்காயுஸா இருக்கட்டும்.

ஆர்யா:—அப்பா. அவன் என்னும் பதினாறுவயதாய் சிரஞ்சீவியாயிருக்கட்டுண்டா!

ஸ்பு:—சொல்ல மறந்துட்டேனே. காசி விச்வனாதஸ்வாமி ஒரு நாளைக்கு நேரில் ப்ரத்யக்ஷம் ஆகி கைலாஸத்துலேருந்து ஐந்து லிங்கம் கொண்டுவந்து கொடுத்திருக்கார். நாலு திக்கிலேயும் ஸ்தாபிக்கப் போரூரும் அடாடா! என்ன சக்தி என்ன யோகம். — எங்கம்மா உடம்பு சீக்காயிருக்கா. நீ போய் பார்த்துக்கோ நானும் சமயத்தில் வரேன் என்று சொன்னூர். நான் நேரே இங்கே வறேன். அவர் சொன்னப்பலேயே உங்களுக்கு உடம்பு அசௌக்யமாயிருக்கே — நான் கிளம்பிவர அன்னிக்கிதான் என்னை அனுப்பிவிட்டு எங்கேயோ ப்ரயாகையிலே யாரையோ பார்க்கணும்னு போய்விட்டார்.

ஆர்யா:—எப்போடா இங்கே வரதாக சொன்னுன். நான் எப்போ பார்ப்பேன்?

ஸ்பு:—எங்கம்மா இன்னும் கொஞ்சகாலம் உயிரோடே இருப்பா. எனக்கு அவள் அந்த்யகாலம் தெரியும். அவள் அப்போ நினைத்ததும் வரேன் கட்டாயம். கவலைப்படாதே இருக்கச் சொல். நீ போய் ஜாக்கிறதையாக பார்த்துக்கோன்னூர். நான் ஆனமட்டும் அங்கேயே இருக்கேன்னேன். நான் வந்து அம்மா கார்யத்துக்கு அப்பரம் உன்னை அழைச்சுக்கறேன்னு. சரின்னு கிளம்பி வந்துட்டேன். அவ்வளவுதான்.

மீனாக்ஷி:—ஸுபுத்தா! இத்தனை நாழி அவர் ஆத்துக்கு வந்திருப்பார். நல்லவேளையா நீ இப்போ வந்துட்டே. கொஞ்சம்

அம்மாவைக் கவனிச்சுக்கோ. நான் ஆத்துக்கு போய்ட்டு சீக்கிரம் வந்துடறேன். [போகிறாள்]

ஆர்யா:—ஆ! என் கண்மணியையும் நீ அழைச்சுண்டு வரப்படா தோடா? சங்கரா! [படுக்கையில் சாய்கிறாள்]

ஸ்த்ரீ:—அம்மா கவலைப்படாதீர்கள். அவர் வந்துவிடுவார்.

---

## அங்கம் 3.

### காட்சி 3.

[பிரயாகையில் திருவேணி கட்டம். துஷாக்னி மூட்டி அதில் பட்டபாதர் வீற்றிருத்தல். பிரபாகரர் முதலான பாட்ட சிஷ்யர்கள் துக்கித்துக்கொண்டிருக்கிறார்கள்]

ப்ரபா:—குருவர்ய! திடமொன்று இவ்விதம் சரீரத்யாகம் செய்து கொள்ள முடிவு செய்து விட்டீர்களே! கர்ம மார்க்கத்தில் கர்ம பலன்களினின்றும் தப்ப வேறு வழியில்லையோ! இந்த சாகஸ கார்யங்களைச் செய்தால் தான் மோக்ஷம் ஸித்திக்குமா!

பட்ட:—சிஷ்யர்காள், மீமாம்ஸ சாஸ்திரமானது வேதத்தின் முக்கிய பாகம். அதை நம்பிய நமக்கு கர்மாக்களினாலேயே தான் மோக்ஷம். ஈசுவர பக்தி ஆத்மஞானம் வேண்டியதில்லை. அதில் பலன் நிச்சயமில்லை.—கர்மாக்களோ நிச்சயம் பலனளித்தே தீரும். நான் பௌத்த குருவிடம் மாறுவேடம் பூண்டு அம்மத உண்மையை கற்றதல்லாமல் அதைக் கண்டித்து வேத நெறியை நிலைநாட்டினேன் — நான் செய்த துஷ்கர்மாவுக்கேற்ற பிராயச்சித்தம் செய்து கொள்ளாவிடின் அதன் பலனை யனுபவித்தே தீரவேண்டும். அம்மகாபாவத்திற்கு இவ்வுமிக்காந்தல் நெருப்பிடையே பிராணனை விடுவதே பிராயச்சித்தம் என்று சாத்திரங்கள் கூறுகின்றன. ஆதலின் இந்த பயனற்ற பூத உடம்பை விடத் துணிந்தேன்.

[திரைக்குள் "நாராயண" சப்தம். சங்கரர் சிஷ்யர்களுடன் வருதல். பாட்டு. அனுபந்தம் பார்க்க]

ஆன:—ஹா! ஹா! என்ன ஆச்சரியம். நெருப்பிலிருந்தும் கொஞ்சமும் கலங்காத பிரஸன்னமான முகத்துடன் விளங்கும் இவர் சோபையே சோபை.

பத்ம:—என்ன ஆச்சரியம். யாராலும் பொறுக்க முடியாத கார்யம்

ப்ரபா:—குருவர்ய! சற்றுப்பொறுங்கள். இதோ யாரோ காஷாயம், தண்டத்துடன் ஒரு பால ஸந்யாஸி வருகிறார்.

பட்ட:—யதியே! வரவேணும்! வரவேணும்! ஈசுவரனைப் போன்ற தங்களை இவ்வந்திய காலத்தில் தரிசிக்கும் பாக்யம் பெற்றேனே.

சங்க:—ஸ்வாமி! இதென்ன கோரமான கார்யம்! எல்லாமறிந்த தாங்களும் இவ்வாறு சரீரத்திற்கு அபாயத்தைத்தாமே வருவித்து கொள்ளலாமா? வேதத்தில் இதற்குப் பிரமாணமில்லையே! கர்ம பலன்களை ஈசுவரார்ப்பணம் செய்துவிடின் அதன்பலன் நம்மை அடையாதே.

பட்ட:—சங்கரா! ஜைன பாடசாலையில் நான் ஒரு பௌத்தன் என்று கபடமாய் வேதத்தை அப்யஸித்து அவர்களை எல்லோரையும் நாசம் செய்தேன். ஆகையால் குருத்ரோஹம் செய்தவனாகிவிட்டேன். ஆகையால் பிராயச்சித்த விதிப்படி துஷாக்னிப் பிரவேசம் செய்து புத்தி பூர்வமாக பாப நிவர்த்தி செய்துகொள்ள இவ்விதம் தீர்மானித்துவிட்டேன்.

சங்:—ஸ்வாமி! தாங்கள் தகாத கார்யம் ஒன்றும் செய்துவிடவில்லையே! அவ்வாறு செய்திருப்பினும் ஈசுவர பக்தியாலும் ஆத்ம ஞானத்தாலும் ப்ராயச்சித்தம் செய்து கொண்டுவிடலாமே! கர்ம மார்க்கத்தின் பலனாக எதைப் பெறலாமோ அதைவிட உயர்ந்ததான விதேக முக்தியை அடைந்துய்யலாமே. வெளி வந்து நம்முடைய ஸித்தாந்தத்தை கேட்டு உய்யும் வகை உணர்ந்து உத்தம கதியை அடையலாம்!

பட்ட:—தாம் சொல்வது சரியே எப்பொழுது என் தேகத்தை விட தீர்மானித்துவிட்டேனோ அதினின்றும் பிறழேன். நான் தமது தரிசனத்தாலேயே க்ருதார்த்தனானேன். இப்போதோ என்பாதி சரீரத்திற்குமேல் சாம்பராகிவிட்டது. உமது பாஷ்யத்தையும், வாதத்தையும் கேட்டு பரம சந்தோஷம் அடைந்தேன். இனி என்னிடம் வாதம் செய்வதில்

என்ன பயன். என்னிலும் இம் மார்க்கத்தில் பற்றுள்ளவரும், அதிக சாமர்த்தியசாலியுமான என் சிஷ்யர் மண்டன மிச்ரர் இருக்கிறார். நீர் மாஹிஷ்மதி சென்று அவருக்கு இதைப் போதித்து அவரை சிஷ்யராக்கிக்கொண்டால் உமக்குமிகவும் உதவுவார். எல்லாம் ஈசுவர ஸங்கல்பம். சிஷ்யர்காள்! இதோ நிற்கும் சங்கரரே இனி உங்களுக்கு ஆசாரியர். இதோநான் என் ஸங்கல்பத்தை நிறைவேற்றிக்கொள்கிறேன்.

[அக்னியில் மறைதல்]

எல்லோரும்.—ஜைன ஸந்தான தூமகேது குமாரில பட்டபாதாசார்யாளுக்கு ஜே! ஜே!

சங்க:—சிஷ்யர்காள்! என்ன ஆச்சரியம்! கர்ம மார்க்கத்தின் பெருமையே பெருமை! ஆஹா! கர்மாக்களைச் செய்து புத்தி, வாக், மனோ, காயம் இவைகளை தன் வசப்படுத்திக்கொள்ளும் சாமர்த்தியம் சாமான்யமா? இப்பேர்ப்பட்டவர்களுக்கு ஈசுவரன் தான் எதற்கு? ஞானமும்தான் ஏன்? புத்தியில்லாதவர்களுக்குத்தான் ஞானமும் பக்தியும் என்ற இவர்கள் கொள்கை கொடியதே. யாவருக்கும் பயன் படாது. இவர்களுக்கு ஞானமும் வைராக்யமும் ஏற்படின் எத்தனை மேன்மையாக விளங்கும். இவ்வுத்தமர் ஆக்ஞைப்படி கர்ம மார்க்கத்தை ஜயித்து ஞான மார்க்கத்தை ஸ்தாபிக்கவேண்டும்.

ப்ரபா:—ஸத்குரோ! குருவர்யர் சொன்னபடி கர்ம மார்க்கப் பிரவர்த்தகரான மண்டனரை ஜயித்தால் இஜ்ஜகத்தையே ஜயித்ததாகும். உலகமே திரும்பிவிடும். அவர் ஸகல சாஸ்திர ஸம்பன்னர். மீமாம்ஸகம் பூர்வகாண்டமுழுதும் கரதலாமலகமாய் அறிந்து அதன்படி அனுஷ்டிப்பவர். அவரது மனைவி ஸாக்ஷாத் ஸ்ரீ ஸரஸ்வதி தேவியே.

சங்க:—ஆம். அவரை ஜயிப்பது லேசான கார்யமல்ல.

பத்ம:—குருவர்ய! இச் சங்கையேன்! மகா மேருவை மண்ணாங்கட்டி எதிர்க்குமா? ஸத்யத்தின் முன் அஸத்யம் நிற்குமா? அதுபோல் மஹா ஞானியாகிய தங்களை கர்மடர்கள் கண்டாலே கதிகலங்குவரே.

சங்க:—எல்லாம் ஈசன் அருள். மண்டனரை வெல்வதவசியம். இதோ அவர் நகரம் செல்வோம். ஆங்கு அவரிருப்பிடம் எங்குளதோ?

ப்ரபா:—குருநிதே! அன்னவர் வீட்டின் அடையாளம் நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர் வீட்டு மாடியில் இரண்டு கூண்டுகளில் அடைக்கப்பட்டிருக்கும் இரண்டு கிளிகளில் ஒன்று "இந்த ஜகம் ஸத்யமா" என்னும். மற்றது அஸத்யம் என்று பதிலளிக்குமாம். இந்த அடையாள முடையதே அவர் வீடு.

சங்க:—இதிலிருந்தே அன்னவரின் ஸாமர்த்தியத்தைப் பாருங்கள்! எந்தவிதத்திலும் அவரை விடுவதில்லை. வாருங்கள் இப்பொழுதே அங்கு செல்வோம் ["நாராயண" சப்தத்துடன் வெளியேறுதல்]

---

## அங்கம் 3.
### காட்சி 4.

[மண்டனமிச்ரர் வீடு. ஓர்புறம் அக்னிஹோத்திரம். ஓர் புறம் சாய்மணையுடன் பலகை, மான்தோல், முன்பு சிக்குப்பலகையில் விரித்த ஏட்டுச்சுவடி, பக்கத்தில் கிண்டி, தர்ப்பை, சமித். ஒரு புறமாக மடிப்பட்டாடை உடுத்தி வாயில் முணுமுணுத்துக் கொண்டே கைகளில் வெள்ளிச் செம்பு, பஞ்சபாத்திரத்துடன் மண்டன மிச்ரர் பிரவேசம்.]

மண்ட:—[தனக்குள்] இன்று சிரார்த்த திதி. வ்யாஸர், ஜைமினி இவர்களை நிமந்த்ரணம் வரித்திருக்கிறேன். மாத்யான்ஹிக வேளை ஆகிறது. இன்னும் அவர்கள் வரக்காணோம். [சிஷ்யன் மாதவமிச்ரன் வருதல்] என்ன மாதவா! ஸ்வயம்பாகம் தயாராகிவிட்டதா? அவள் எங்கே கூப்பிடு.

மாதவ:—குரோ! எல்லாம் தயார். [ஸரஸவாணி வருதல்]

ஸரஸ:—நாதா! என்னைக்கூப்பிட்டீர்களா?

மண்ட:—ஆம். ஔபாஸனம் செய்யவேணும். தர்பை, ஸமித், அக்ஷதை எல்லாம் கொண்டுவா.

மாதவ:—அதெல்லாம் அப்போதே தயாராகஎடுத்து வைத்தாயிற்றே.

மண்ட:—பூஜைத் தட்டில் எள்ளைக் காணோமே. வைக்க மறந்து விட்டாயோ? மாதவா! துளசி இருக்கா பார்.

ஸரஸ:—நாதா! இதோ தனியாக தொன்னையில் இருக்கிறதே.

மாதவ:—அப்போதே கொண்டுவந்து வைத்துவிட்டேனே.

[வ்யாஸர், ஜைமினி ப்ரவேசம்]

இதோ வ்யாசர், ஜைமினி வந்துவிட்டார்கள்.

மண்ட:—சரி, ஸரஸா! பாதப்பிரக்ஷாலனத்துக்கு தீர்த்தம் கொண்டுவா. [அதிதிகளை நோக்கி] இந்த ஆஸனத்திலமருங்கள்.

[மண்டனர் அர்க்யபாத்யம் ஸமர்ப்பிக்கிறார்.]

வ்யாஸர்:—மீண்டனு! இனி சிருத்தத்திற்கு ஆரம்பிக்கலாமே.

[சங்கரர் நாராயண கோஷத்துடன் முற்றம்வழியாக இறங்குகிறார்]

மண்ட:—[கோபத்துடன்] யாரடா முண்டம் இங்கே?

சங்கரர்:—கழுத்துமட்டில்தான் — முண்டம்.

மண்ட:—நீ வந்த வழியை யன்றோ கேட்கிறேன்?

சங்கரர்:—இதே வழியேதான். வந்த வழி தெரிந்து அதனால் உமக்கென்ன பயன்.

மண்ட:—வெட்கம் கெட்டவனே! கழுதையும் சுமக்காத கந்தையுடுத்தி, சிகை, பூணூல் தவிர்த்தாயே. அதென்ன மிக்க பாரமோ மகாபாபி.

சங்க:—உன் அப்பனும் அணியத் தகாத ரக்த வஸ்திரம் நான் அணிந்துளேன். சிகை, பூணூல், நானேதத் தவிர்க்கவில்லை. வேதமே அவ்விதம் சொல்கிறதே. சரீரமே எனக்கு பாரமாகத் தானிருக்கிறது.

மண்ட:—புத்தியில்லா மிருகமே! கைப்பிடித்துக் காதலித்த மனைவியைக் காப்பாற்ற வகை யில்லாது சிஷ்யர்களையும், புஸ்தகங்களையும் தேடியலைவதற்கோ இவ் வேஷம்! என்னே உனது பிரம நிஷ்டை!

சங்க:—குருசிச்ருஷைக்கு பயந்து, ப்ருமசரியம் துறந்து, ஸ்திரீ ஸேவை செய்துகொண்டிருக்கும் உமது கர்ம நிஷ்டையுண்டே வெகு பேஷ்!

மண்ட:—அடேப்ரஷ்டா! போதும் உன துஸந்யாஸ தீக்ஷை! பிக்ஷை ஸுலபமாய் கிடைக்கும் என்று போட்டாயோ இந்த வேஷம். சண்டாளா! ப்ரும்மசர்யம் முடித்து கிருஹஸ்தனுகி புத்திர உற்பத்தி செய்யாத உனக்கு வீர ஹத்தியாதி தோஷம் சம்பவிக்குமே. அதற்கென் செய்வாய்!

சங்க:—இதற்கு மேல் கொடிய பாபத்தை பிரதி க்ஷணமும் நீர் செய்கிறீர். "ஆத்ம ஹத்தி"! ஜனன மரணத்தினின்றும் தப்பும் வழியறியாத மூடா! ஸ்திரீ புத்திர, தன ஸந்தானங்களைக் காட்டிலும் பெரிதன்றோ இவ்வாத்மா. இதை நீ யறியவில்லையே.

மண்ட:—[பற்களை நற நறவென்று கடித்து] இப்போது உன்னுடன் பேசியதே பிசகு. இவனை யாரடா உள்ளேவிட்டது. யாக மண்டபத்தில் சுவானம் நுழைந்தது போல். இவனை அடித்துத் துரத்துங்கள்,

[இதற்குள் வ்யாஸரும், ஜைமினியும் பேசிக்கொள்கிறார்கள்]

வ்யாஸர்:—இவர் யார் தெரியுமோ! ஜைமினி

ஜைமினி:—தங்களுக்குத் தெரிந்திருக்கலாம். எனக்கு அவ்வளவு யோக்யதை இல்லை.

வ்யாஸர்:—பவிஷ்யோத்தர புராணத்தில் சங்கரர் அவதாரம் என்று வர்ணிக்கப்பட்டிருக்கிறதே. அவர்! இவர்தான்

ஜைமினி:—ஹோ! — கைலாஸாதிபரா?

வ்யாஸர்:—ஆம். அவர்தான். ஸந்தேகமில்லை

வ்யாஸர்:—ஹே மண்டனரே. இப்படி சண்டை யிடுவதற்கிது சமயமன்று. தர்மமாகாது. யோஜித்துப்பாரும். இப்போது அவரை விஷ்ணு தேவராகவரித்துப் பூஜை செய்யும். போஜனந்தரம் பார்த்துக்கொள்வோம்.

மண்ட—[சாந்தமடைந்து] சரி. யதிகளைப் பங்கப்படுத்தி கர்மமே மேலெனச் சாற்றும் எனக்கு இந்த யதியைக் கண்டதும்

என்னை யறியாது கோபம் மேலிட்டு விட்டது. [ஆசமனம் செய்து கண்ணைத் துடைத்து] இவ்விருவரும் எனக்கு பூஜ்யர்கள். இவர்கள் சொல்கிறபடி உம்மை ஓய் யதே! விஷ்ணுவாகவரிக்கிறேன். இரும்.

சங்கர:—உமது பிக்ஷையுமாச்சு. சிக்ஷையுமாச்சு. இந்த பிக்ஷை எனக்கு வேண்டியதில்லை. நான் புபுக்ஷு அல்ல முமுக்ஷு பிரதிக்ஞா பூர்வமாக வாத பிக்ஷை கொடும். அதற்காகவே தான் நான் வந்தேன்.

மண்ட:—ரொம்ப சரி. அதற்குப் பயந்தவன் நானல்ல. இன்று பிதிர் தினம் இந்த பிக்ஷையும் ஆகட்டும். அவசியம் வாதம் செய்வோம்

சங்கர:—நாளையதி. மாத்யான்ஹிகஸ்நானம் செய்யவேண்டும். முடித்துக்கொண்டு பிறகு வருகிறேன். ["நாருயண" வெளியேறுதல்]

வ்யாஸர்:—சரி, இனிமேல் சிரார்த்தம் வரிக்கலாமே.

மண்ட:—நல்லது அப்படி அந்த கூடத்திற்கு செல்வோம். அங்குதான் எல்லாம் தயாராகியிருக்கிறது வாருங்கள். [எல்லோரும் வெளியேறுதல்.]

---

## அங்கம் 4.

### காட்சி 1

[மாஹிஷ்மதி சிவாலயம். சங்கரர், மண்டனர், மாதவமிச்ரன் பிரும்மணர்கள் வந்து அமர்தல்]

மண்டனர்:—ஓய்! யதே! இனி நம் ஸித்தாந்தங்களைப் பகிரங்கப் படுத்தி வாதம் தொடங்கலாமா?

சங்க:—ஆக்ஷேபணை இல்லை. ஆனால் நம்மில் தோற்றவர் யார், ஜயித்தவர் யார் என்று பாரபக்ஷமில்லாது நியாயம் சொல்வதற்குத்தக்க "திராயத்" மத்யஸ்தர் ஒருவர் வேண்டுமே? என் செய்வது?

மண்ட:—ஆம் அவசியம்தான், யாரைக் கொணர்வது. இங்குள்ளா ரனைவரும்என்னைச் சேர்ந்தவர். நீரே சொல்லும் யாரையாவது.

சங்க:—எங்கும் தேடிச் செல்லவேண்டியதில்லை, உம் தேவியார் ஸரஸவாணியார் ஸகல கலைகளையும் கற்றறிந்தவளென்று நாம் அறிகின்றோம். ஆகவே அவர்களை அழைக்கலாமே. உமக்கு ஆக்ஷேபமில்லையே!

மண்ட:—ஸ்திரீயாயிற்றே — (யோஜிக்கிறார்) சரி உமதிஷ்டப்படி யே [சிஷ்யனை நோக்கி] அடே மாதவா நீ நம் கிருஹம் சென்று நமதாக்ஞையைத் தெரிவித்து நம் பத்தினியை அழைத்துவா.

மாதவ:—அப்படியே இதோ. [போகிறான்]

சங்க:—மண்டனமிச்ரரே! நம் வாதம் வீண் வாதமல்ல. முதலில் அவரவர் ஸித்தாந்தத்தையும், பிரதிக்ஞையையும் சொல்லித் தீர்மானித்த பிறகுதான் வாதம் ஆரம்பிக்கவேணும். என்ன?

மண்ட:-நல்லது. அப்படியே. அதுதான் கிரமம். கேளும். உபநிஷத் பாகத்தில் ஆத்மஸ்வரூபம் சொல்லப்படவில்லை. அவையனைத் தும் கிரியாபரமே. கர்மாவினால்தான் முக்தி, உயிரோடிருக்கும் வரை கர்மா செய்தே தீரவேண்டும். இதுவே என் ஸித்தாந்தம். இதை நீர் கண்டனம் செய்தால் நான் முண்டனம் செய்து காஷாயம் தரித்து சந்யாசியாகி உமக்குச் சிஷ்யனாகிவிடுவேன் சரி. உம் பிரதிக்ஞை என்ன? சொல்லும்.

ஒரு பிராம்மண:—மண்டனரே! அதுவே சரி.

சங்க:—ஜீவன் ஈசுவரன் இரண்டுக்கும் பேதமில்லை, கேவலம் கர் மாக்கள் செய்தால் மட்டும் மோக்ஷம் சித்திக்காது கர்ம பலனை ஈசுவரன்தான் அளிக்கிறார். ஆத்ம ஞானமே முக்திக்கு வித்தாகும். இதை நீர் கண்டனம் செய்துவிட்டால் நான் ஸந்யாசம் விட்டு கிருஹஸ்தனாகி விடுவேன். இல்லாவிடில் மரணாந்தப் பிரயாச்சித்தம் செய்துகொள்வேன். [கமண்டலம் மாதவமிச்சிரன் கையில் இரண்டு மாலை கொண்டு வருகிறான் ஸரஸவாணி வருதல்]

ஸரஸ:—[யதி, பதிகளை நமஸ்கரித்து] நாதா! என்னை அழைத்த காரணம் மாதவனால் அறிந்தேன். ஸ்திரீயாகிய நான் இக் கார்யத்திற்கு தகுந்தவளல்லவே க்ஷமிக்கவேணும்.

சங்க:—ஹே வாணீ! உன் மகிமையை கேள்வியுற்ற நானே உன்னை வரவழைக்கச் செய்தேன். உன் பதிக்கும் நமக்கும் நடக்கப் போகும் வாதத்தை நன்கு பரிசீலனை செய்து நியாயம் சொல்ல வேறு ஒருவராலும் ஆகாது. ஆகவே ஏற்றுக்கொள்ள வேணும்.

ஸரஸ:—ஹே! யதே! தங்கள் வேண்டுகோளுக்கிறங்குவதில் பல கஷ்டங்களிருக்கின்றன. முதலாக என் பதி வாதம் செய்யுங் கால், நான் மத்யஸ்தம் செய்வது தகாது. மேலும் தங்கள் பக்ஷம் நியாயம் சொன்னால் பதித்ரோஹம் நேரும். என் பதி பக்ஷ பாதம் சம்பவிக்கும். இது மட்டுமல்ல வீட்டில் அக்னி ஹோத்திரம் இருக்கிறது. ப்ரபஞ்ச வாழ்க்கையில் இன்னும் அநேக சிரமமுண்டு. ஆதலின் ஓர் உபாயம் செய்கிறேன். உங்களிருவர் கழுத்திலும் நான் கொடுக்கும் பூமாலையை அணியுங்கள். வாத முடிவில் எவர் மாலை வாடாது நிற்கிறதோ அவர் கக்ஷியே ஜயம். இனி என் மத்யஸ்தம் தேவையில்லை. நாதா! எனக்கு விடை கொடுங்கள் சென்று வருகிறேன் [மண்டனர் தலையை அசைக்க, ஸரஸவாணி செல்கிறாள்]

சங்க:—பேஷ் இது நல்ல உபாயந்தான் மண்டனரே! இனி வாதம் தொடங்கலாமே.

மண்ட:—தடை என்ன அதற்கு?

சங்க:—என் ஸித்தாந்தத்தை நீர் முன்னே கேட்டறிந்திருக்கிறீர். பூர்வ பக்ஷம் செய்யும்!

மண்ட:—அக்கினி ஹோத்திரத்தை விட்டால் வீரஹத்திதோஷம் வருகிறது. கெட்ட கர்மாவைச் செய்தாலும் பாபம். நித்திய கர்மாவை விட்டாலும் பாபம். சந்யாஸிகளுக்கோ கர்மாக்கள் இல்லை! — ஸ்வாமி இருக்கிறாரா? இல்லையா என்ற கவலை வேண்டாம். இருந்தால் இருக்கட்டும். இல்லாவிட்டால் போகட்டும். வேதத்தில் சொன்னபடி கர்மாக்கள் கட்டாயம் செய்தே ஆகவேண்டும். அவைகளேதான் மோக்ஷம் கொடுக்கும். கர்மாக்கள் செய்தாலேயே பலன் இல்லையா? நடுவில் ஸ்வாமி ஒருவர் எதற்காக?

சங்க:—கர்ம்மா மாத்திரம் சிரேயஸைக் கொடுக்காது. அவைகள் கணக்கில் அகப்பட்டன. ஆகவே அதனுடைய பலனும் கணக்கில் அகப்பட்டது. கணக்கில்லாத காலம் சௌக்யத்தைஅடைவதற்குகர்மாக்கள் மட்டும் போதாது. கர்மாக்களுக்குப் பலனை அளிக்க ஈசுவரன் வேண்டுவதவசியமே. அவைகள் சாச்வதமான சிரேயஸுக்கு காரணமாகாது அந்த சிரேயஸ் ஈசுவர அனுக்ரகத்தால்தான் உண்டாகும். கர்மகாண்டத்தை மாத்திரம் அனுஷ்டிக்ககூடாது. அதன் பலன் ஞான கண்டத்தில் இருக்கிறது. எல்லா கர்மாக்களும் பரமேச்வரனிடத்தில் விநியோகம் ஆகவேண்டும். அவ்வாறு ஆனால்தான் பிறவித் துன்பம் ஒழியும். கர்மாக்களால் கட்டுப்படாமல் இருப்பது தான் பரம பிரயோஜனம். அதுதான் ப்ரும்மானந்தம். வேதத்தின் பரம தாத்பர்யம் அதுதான் [பாடுகிறார் அனுபந்தம் பார்க்க]

ஒரு வயோதிக ப்ராம்மணன்:—[எழுந்து நின்று] ஸ்வாமி! ஒரு விக்யாபனம். தங்கள் திவ்ய வாதத்தைக் கேட்க அநேக ஸத்ப்ராம்மணர்கள் இடம் காணாது வெளி மண்டபத்தே நின்றும் பலர் வீடு திரும்பி விட்டனர். ஸந்த்யாகாலமும், நெருங்கிவிட்டது. ஆகையால் இன்று இத்துடன் நிறுத்தி நாளை ஆயிரக்கால் மண்டபத்தில் ஸபையை வைத்துக்கொள்ள பிரார்த்திக்கிறேன்.

சங்க:—ஸந்தோஷம் அப்படியே ஆகட்டும்.

மண்ட:—ஆம் அதுவே சரி. தமதிஷ்டப்படியே

---

## அங்கம் 4.

### காட்சி 2.

[மாஹிஷ்மதியில் ஒருமடம். ஒருவயோதிக சாஸ்திரிகளும், அனந்தராமனும் ஒவ்வொருபக்கத்தில் ஆஸனங்களில் உட்கார்ந்து ஜபம் செய்து கொண்டிருக்கிறார்கள்]

அன:—சாஸ்திரிகளே! ஜபம் முடிஞ்சு போச்சோன்னோ! — ஒங்களை நேத்திக்கே ஒரு சமாசாரம் கேக்கணம்னு இருந்தேன்.

சாஸ்திரி:—[முணுமுணுத்துக்கொண்டே] உஸ் — உஸ் [பேசாதிருக்கும்படி கையால் ஜாடை காட்டுகிறார்]

அன:—[பட்டுக்குள் கையை உருட்டிக்கொண்டே] என்னய்யா பெருத்த சங்கடமாயிருக்கு. இந்த காலத்லே மனுஷன் பிழைக்கரத்துக்கே வழியில்லாமே யிருக்கே! — ஆஹா! கொஞ்சம் சௌக்யமாயிருக்கலாம்னு பாடலீபுரத்லே கொஞ்சம் காலத்தை கழிச்சேன். நம்ப துரதிர்ஷ்டம் ஓடி வரும்படியா ஆச்சு — வழியிலே சனீஸ்வர பகவான் பிடிச்சாப்பலே ஒரு அபஸ்மாரத்தை இவாள்ளாரும் சேர்ந்து கழுத்திலே கட்டித்தொலேச்சா. — ஏதோ கொஞ்சம் பூர்வீகமான நிலம், பத்து வீடு உபாத்யாயம் இருந்துதேன்னு காலடிக்குப் போனேன் — அந்த சிடுமூஞ்சி பிராம்மணன் எல்லாத்தையும் புடிச்சுண்டு விடமாட்டேங்கறது. என்ன பண்றது! — கிருஹஸ்தாசிரமத்திலே இருந்துண்டு பிக்ஷைக்கு போகவும் முடியல்லே — எவ்வளவு நாளைக்குத்தான் மாமனார் வீட்டிலே இருக்கிறது! — பாவம் அவர்தான் என்ன! இந்த கர்மாக்களைசெஞ்சு தொலேக்கணும்மேன்னு மூணுவது இளையாளை கட்டிண்டிருக்கார் — அது சிறிசு! அதுக்கும் இதுக்கும் ஒத்துக்கமாட்டேங்கறது — என்ன பண்ணாது?

சாஸ்திரி:—[ஜபம் செய்து முடித்துவிட்டு] ஓம்! என்னங்கணும் கண்டபடி உளறிண்டிருக்கீர் — ஜபதபாதிகள் செய்றபோது கூடவா இந்த எழவு ஞாபகமெல்லாம். — பெரிய சாப்பாட்டுராமன் கணும் நீர்.

அன:—உமக்கென்னங்கணும். சௌக்யமா ஆத்து வாசல்லே கொண்டுவந்து குத்தகைநெல் அளந்துடறான். ஆம்படையானும், பொண்டாட்டியும் இரண்டேபேர். சௌக்யமா இருக்கீர். நானோ அசலூர். பிழைக்க வந்தவன். நான் படும் அவஸ்தை எனக்குன்னா தெரியும். இரண்டு குழந்தைகளே வேறே வச்சுண்டு சம்ரக்ஷிக்க வேண்டிருக்கு. இந்த லக்ஷணத்திலே நாளை ஸப்தமி தகப்பனார் சிரார்த்தம். பணக்காரர்களுக்கு பரவாயில்லே. என்னைப்போலே ஏழைபாழைகளுக்கு கர்மா செய்யவேன்றால் முடியுமா? என்ன பண்றதுன்னு புரியல்லே.

சாஸ்தி:—பண்றது என்ன? யாராவது இரண்டுபேரை நிமந்த்ரணத்துக்கு சொல்றது. எப்படியாவது காரியத்தை நடத்தறது. அதுக்காக கர்மாவை விட்டுட்றதா என்ன? மகாபாபமன்னு! நன்னு சொன்னீர்!

அன:—சரி. தயவு பண்ணி நீங்க ஒத்தர் வரணும். அடுத்தாத்து பஞ்சாமிகேச சாஸ்திரிகள்தான் இருக்கவே இருக்கார். — நீங்கமட்டும் ——

சாஸ்தி:—அதுக்கென்ன பார்த்துக்கொள்வோம். யாருகிட்டேயாவது கேட்டு தக்ஷிணையைமட்டும் ஆக பண்ணிவையும். ஏகசுப்ரத்துக்குக் குறையாமே!

அன:—அதுக்குத்தான் நானும் முக்கிமுக்கிப்பாக்கறேன் — சரிப்படவில்லை. எப்படியாவது முடிஞ்சா தோதுப்பண்ணிவிடுகிறேன் — இல்லாதபோனு நீங்கதான் க்ஷமிக்கவேணும்.

சாஸ்தி:—நன்னுயிருக்குங்காணும் நீர் சொல்ற கதை. ஒரு கிருச்சரத்துக்குகூட வழியில்லாமே என்ன நிமந்த்ரணுங்கணும்— யோஜனை பண்ணிண்டு சொல்றேன். — ஸப்தமியா — அன்னிக்கி எனக்கு வேறே எங்கேயோ காரியம் இருந்ததா ஞாபகம். ஆத்துக்குப்போய் ஞாபகப்படுத்திண்டுதான் சொல்லணும்.

அன:—மாமா! மாமா! அப்படி சொல்லக்கூடாது. நீங்க எப்படியாவது ஒப்புக்கதான்வேணும். [எழுந்து நமஸ்காரம்செய்து] இல்லாத போனு வேறே ஒத்தரையும் சொல்ல வழியில்லே.

சாஸ்தி:—ரொம்ப சாகஸம் பண்ணுறிங்கணும் — நான்தான் யோஜனை பண்ணிண்டு சொல்றேன்னேனே.

அன:—இன்னும் யோஜனையா? — சரி — சரி — நீர் ஒப்புண்டா போச்சு, போனுப்போறது சிரார்த்தத்தே, கர்மாவைவிடாமே செஞ்சு தொலைக்கிறேன் — இல்லேயோ [சற்று யோஜனை செய்து] சரி — அதான் சரி — எங்களூர்போர்வழி சங்காசாரியார் வந்திருக்கார் — பெண்டாட்டி பிள்ளை எல்லாத்தையும் விட்டுட்டு அவர்கூட இப்பவே சன்யாஸியா கிளம்பிவிட்றேன் — அதைச் செஞ்சு, இதைச்செஞ்சு யாகம்பண்ணி, மற்ற எல்லா கர்மாவும் பண்ணினுதானே இப்படியே இருந்தா

மோக்ஷம் கிடைக்கும் — அன்னிக்கி அவர் சொன்னப்பலே சன்யாஸியாபோய் கிருஷ்ண, ராமான்னு பக்தி பண்ணினால் போரவழிக்காவது முக்தி உண்டு — இந்த எழவு கவலை யெல்லாம் இல்லாமே இருக்கலாம்.

சாஸ்தி:—என்ன! ஓய்! பித்தம் சரியா தலைக்கேறிப்போச்சோ! — என்ன என்னமோ எல்லாம் பேத்தரீரே. [காதைப்பொத்திண்டு] சிவ, சிவா. சன்யாஸியா! — வாயாலே சொன்னால் கூட பாவங்கணும்.—சங்காசாரியார் தான் இருபது நாளாக வாதம்பண்ணி பாக்காரே! சரியா மூஞ்சி உடைபட்டுண்டு உருப்படாமே போப்போரார். உமக்கும் பைத்தியம் பிடிச்சுப் போச்சா! சரி, சரி — முடியவே முடியாது.

அன:—நீர் எந்த ஊர்லே இருக்கிறதா ஞாபகம். அங்கே நடக்கிற சமாசாரம் தெரியுமோல்லையோ — மண்டனர் வார்த்தை எல்லாம் எங்கிட்டேயும் ஒம்மகிட்டேயும்தான் — அந்த யதீச்வரர் கிட்டே பாச்சா பலிக்கல்லைங்காணும். — நான்தான் தினம் தினம்போய்ப் பார்த்துண்டே வரேனே — மண்டனர் ஒரு வார்த்தை சொல்றதுதான் தாமஸம் — எங்க சங்கரர் கன்னத்திலே அறைஞ்சாப்பலே உடனே பதில் — ஊஹூம் [தலையை ஆட்டிக்கொண்டு] மண்டனர் ஜயித்து விடுவாரா? — சரிதான்.

சாஸ்தி:—நிஜம்தானா? — மண்டனர் தோற்றுப்போயிடுவாரா என்ன? ஒரு நாளும் இல்லை.

அன:—குட்டிச்சுவத்திலே முட்டிக்கொள்ள வெள்ளெழுத்தா! — அதைப்பற்றி கொஞ்சம்கூட ஸந்தேகமே வாண்டாம். — ஸாஸவாணி போட்டமாலேகூட கொஞ்சம் கொஞ்சமா கருகிண்டே வந்துடுத்தே! அடே! நாழியாயிடுத்து — இத்தனே நாழி ஆரம்பிச்சிருப்பாளே! நான் போய்ட்டுவந்து முழுக்க சமாசாரம் சாயந்திரம் சொல்றேன். — [கிளம்புகிறான்.]

சாஸ்தி:—ஓய்! ஓய்! சித்தே இரும். நானும்வரேன்!

[இருவரும் செல்கிறார்கள்]

## அங்கம் 4.

### காட்சி 3.

[கோவிலில் ஆயிரக்கால் மண்டபம். ஒருபுறம் சங்கரர் சிஷ்யர்களுடன். எதிரில் மண்டனர் கர்மமார்க்கப் பிரவர்த்தர்களுடன் வீற்றிருத்தல்]

சங்கரர்:—மண்டனமிச்ரரே! சென்ற 20 தினங்களாக நீர் கேட்ட கேள்விகட்கெல்லாம் பதிலுரைத்துவிட்டேன். உமது சந்தேகமெல்லாம் தீர்ந்துவிட்டனவா!

மண்ட:—எல்லாம் தீர்ந்தது. ஆயினும் இக்கடைசி ப்ரச்னத்திற்கு மட்டும் உத்தரம்சொன்னால் நீரே ஜயித்தவர் ஆவீர்.

சங்க:—எதாயிருந்தாலும் சரி. சங்கை வேண்டாம். கேளும்.

மண்ட:—ஸர்வ வேதாந்தங்களையும் செய்தவர் வ்யாஸர். அவர் சிஷ்யர் ஜைமினி தன் குருவின் மார்க்கத்துக்கு விரோதமாக ஒரு மார்க்கத்தை என் உண்டுபண்ணினர். தன் மதத்திற்கு விரோதமான மதத்தை ஸ்தாபித்த சிஷ்யரிடம் வ்யாஸர் ப்ரீதி செலுத்துவதுதான் எப்படிப்பொருந்தும்?

சங்க:—மண்டனரே! இது சரியான கேள்விதான்! இதோ ஸமாதானம் அதற்கு. ஜைமினி குருவின்மார்க்கத்துக்கு அனுகூலமே செய்திருக்கின்றார். எப்படி யெனில் கர்மாக்கள் செய்தாலல்லது சித்த சுத்தி உண்டாவதில்லை. சித்த சுத்தியன்றி ஆத்ம விசாரணை செய்ய சிரத்தை ஏற்படாது. ஸ்திரமாயுமிராது. மாடியில் ஏறுவதற்கு எப்படி படிக்கட்டுகள் ஸாதனமோ, அவ்விதமே, ஞானமார்க்கத்தை அடைய கர்ம மார்க்கம் ஸாதனம். பாரும்! தாமும் இதுவரையில் கர்மாக்களைச் செய்து வந்ததால் தானன்றோ இப்பொழுது உண்மையான ஆனந்தத்தின் விவரணமும், உண்மையும் வெளியாகி, உமக்கு ஸமபுத்தி ஏற்பட்டது.

மண்ட:—[கைகூப்பி] ஹே! ஜைமினி! இது உண்மைதானே! சங்கரர கூறுவது தமக்குகந்ததுதானே.

ஜைமினி:—[திரைக்குள்] சங்கரர் கூறுவனயாவும் உண்மையே. அங்கீகரித்தோம் அவரது ஸித்தாந்தத்தை.

மண்ட:—[சங்கரர் பாதம்பற்றி] ஹே! ஸத்குரோ! தங்கள் மஹிமை யறியாது வீண்வாதம் செய்து தங்களைக்கடுமொழிகூறிய என்னை க்ஷமித்து, அடியேனுக்கு ஸந்யாஸ தீக்ஷை கொடுத்தருளவேணும்.

[ஸரஸவாணி வந்து யதிபதிகளை நமஸ்கரித்து]

ஸரஸ:— இருவரும் பிக்ஷைக்கு எழுந்திருக்கலாமே.

மண்ட:—[ஸரஸவாணியைப் பார்த்து பெருமூச்சுவிட்டு, கண்ணை மூடி மௌனம்]

ஸரஸ:—என்ன இது. வாதம் முடிந்துவிட்டதா. வென்றவர் யார்?

சங்க:—தோற்றவர் தங்கள் பதியே. அவரையே கேளுங்கள். மேலும் அதோ கழுத்தில் இட்டபூமாலையே சொல்லுகின்றதே.

ஸரஸ:—உம். இனி என்ன செய்யப்போகின்றீர்?

சங்க:—அவர் பிரதிக்ஞைப்படி அவருக்கு சந்யாஸம் கொடுக்கப் போகிறேன். தங்களுக்கும் ஸம்மதந்தானே?

ஸரஸ:—யதே! சற்றுப்பொறும். ஸ்திரீபுருஷர்களை ஒரேமூர்த்தமாக சாத்திரங்கள் கூறவில்லையா? நீர் என்னையும் வாதில் ஜயித்தாலன்றி என்பதியை எப்படி முற்றிலும் வென்றதாகும்?

சங்க:—[ஒருபுறம், தனக்குள்] இதென்ன விபரீதம். ஸ்திரீயாகிய இவளுடன் வாதம் செய்வது லௌகீகவிருத்தம். வாதம் செய்யாவிடில் மண்டனரை இழக்கநேரிடும் சை! எப்படியும், மண்டனரை சிஷ்யராக்கிக் கொள்வதுதான் என் கடமை. சரி [ஸரஸவாணியைப் பார்த்து] சரி, தங்களிஷ்டப்படி கேள்வி கேட்கலாம். ஆக்ஷேபணையில்லை.

ஸரஸ:—[சபையைப்பார்த்து] ஆஹா! என்பதியையே ஜயித்த இவருக்கு நான் எம்மாத்திரம். இவரைக் கபடமாகவே வெல்லவேண்டும். [சங்கரரைப்பார்த்து] ஓய்! யதே! உம்மை ஸர்வக்ஞரென்று உமது சிஷ்யர்களெல்லோரும் கொண்டாடுகிறார்களே, நீர் காம சாஸ்திரத்தை அறிவீரா?

சங்க:—ஏன்! தங்களுக்கு என்ன தெரிய வேண்டும் அதில்?

ஸரஸ:—இல்லை [சற்று வெட்கத்துடன் தலைகுனிந்து] அமிர்தகலை என்று சொல்வார்களே அது ஸ்திரீ, புமான்களிடம் அந்தந்த பக்ஷங்களில் எந்தெந்த நிலையில் இருக்கும். சொல்லும் பார்ப்போம்.

ஒருப்ராம்மணன்:—ஸபாஷ், ஸரஸவாணி! சரியான கேள்வி, சரியான கேள்வி.

சங்க:—[மௌனம்] "நாராயண," "நாராயண."

ஸரஸ:—ஸர்வக்ஞயரே! ஏன் மௌனம்? உம்மால் கூறமுடியவில்லையா? நான் ஜயித்துவிட்டேனே உம்மை.

[ப்ராம்மணர்கள் ஆரவாரிக்கின்றனர்.]

சங்க:—தேவி! நீ ஸாமான்யையல்ல என்பதை நான் முன்னமேயே அறிவேன். நீ ஸரஸ்வதியின் அவதாரம். சாபத்தினால் இங்குவந்தவள். இவர் சாக்ஷாத் பிரம்மதேவரே. நீகேட்கும் இப்ரச்னங்களுக்கு பதில் இப்பொழுதே அளிப்பேன். ஆனால் இன்னும் ஒரு மாத அவகாசம் கொடுங்கள்.

ஸரஸ:—அப்படியே தந்தேன் — இந்த மட்டும் என் பதி ஒரு மாதம் வரையிலாவது சந்யாஸ அபமிருத்யுவிலிருந்து தப்பினார்.—பிராணபதே! வாருங்கள் நாம் வீடு செல்வோம்.

[சங்கரர், அவர் சிஷ்யர்கள் தவிர எல்லோரும் செல்கின்றனர்.]

பத்மபாதர்:—குரோ! இதென்ன! இப்படிச்செய்து விட்டீர்களே. மண்டனரைக் கைவிட்டீர்களே.

சங்க:—சிஷ்யர்காள்! ஒன்றும் பங்கமில்லை. ஸரஸவாணியின் காம சாஸ்திரத்தைப்பற்றிய எந்தவிதமான கேள்விகட்கும் என் ஞானஸித்தியைக்கொண்டு நான் பதிலளிக்கக்கூடுமாயினும் அவள் "அனுபவமின்றி நீர் உரைப்பதை நான் அங்கீகரிப்பது எங்ஙனம்? நீர் பிரஷ்டராயிருந்தாலன்றி சந்யாசியாகிய நீர் காம சாஸ்திரத்தை கற்றிருக்க வேண்டிய பிரமேயமென்ன" என்று அந்த அக்ஞானிகள் முன்னிலையில் அவமானப்படுத்தி விடுவாள். இதற்கு வேறு உபாயம் செய்யப்போகிறேன்.

[பாடுகிறார்]

ராகம் - சேஞ்சுருட்டி.

நமோக்ஷஸ் யாகாங்க்ஷா நச விபவ வாஞ்சாபி நமே
நவிக்ஞா நாபேக்ஷா சகிமுகஸ — கேச்சாபி நபுன :
அதஸ்த்வாம் ஸம்யாசே ஜனனி ஜனனம் யாது மமவை
ம்ருடானீ ருத்ராணீ சிவசிவ பவானீதி ஜபத :

ஆனந்தகிரி:—குருவர்ய! தாங்கள் ஒரு மாஸம் அவகாசம் கேட்டதன் தாத்பர்யம் என்ன?

சங்க:—கேளுங்கள். இப்பொழுது அமரகன் என்ற அரசன் மரணமடைந்து அவன் ப்ரேதம் நாளை காலை ஸ்மசானம் வரப் போகிறது. இதை நான் அந்தரத்ருஷ்டியால் அறிந்தேன். இப்பொழுதே நாம் கிளம்பி அந்நகரத்திற்கருகாமையில் சென்று என்னுடைய யோகபலத்தால் அதனுள் பிரவேசித்து அவன் பத்னிகளுடன் பழகி காமசாஸ்திரானுபவம்பெற்று மீண்டும் இந்த சரீரத்தை அடைவேன். அதுவரை இந்த சரீரத்தை நீங்கள் ஜாக்கிரதையாகக் காத்துக்கொண்டிருங்கள்.

பத்ம:—இதைக் கேட்க பயமாக இருக்கிறதே. இப்படித் துணிய வேண்டாம்.

சங்க:—ஒன்றும் ஹானியில்லை. ஓரேமாதம் பொறுங்கள், மீண்டும் வந்துசேர்வேன். எல்லாம் ஈசனருளால் ஜயமாக முடியும்.

பத்ம:—ஸத்குருவே யதிவேஷத்திற்கு தோஷாஸ்பதமான காரியமாயிற்றே. மேலும் விஷயவாசனைமிகக் கொடியதாயிற்றே— ச்ரேஷ்டர்கள் எதை ஆசரிக்கிறார்களோ இதரர்களும் அவ்வாறே செய்வர் — காமசாஸ்திரம் எங்கே! சந்யாஸம் எங்கே!—

சங்க:—பத்மபாதரே—கவலைவேண்டாம். பிரம்மஞானிகள் மாயா பத்தர்களல்லர். அவர்கள் ஸங்கல்ப விஹீனர்களாதலால் தூஷணமாகக் கருதலாகாது. ஜனகர் முதலான தேக முக்தர்கள் யக்ஞயாகாதிகள் செய்தது பலத்தை உத்தேசித்தல்ல. ஆகலின் பலன் அவர்களை கட்டுப்படுத்தாது.

பத்ம:—லோகாபவாதம் வருமேயென வருந்துகிறேன்.

சங்க:—சஞ்சல புத்தியுடையவர்களுக்கன்றோ அவ்வாறு பிரமை ஏற்படும். — ரதிசாஸ்திரமறிந்து விஷ்ணுமித்ர புத்திரியான வாணியை ஜயிக்கவே அவ்விதம் செய்வோம். வாருங்கள் போவோம் [எல்லோரும் செல்கின்றனர்.]

## அங்கம் 4.

### காட்சி 4.

[அஸ்லாம் தேசத்தில் அமரக் அரசனது நந்தவனம். பட்டமகிஷி மதனசஞ்சரி ஊஞ்சலில் உல்லாஸமாக ஆடிக்கொண்டு பாடுகிருள். தோழி கமலா ஊஞ்சலாட்டுகிருள்]

மதன:— ராகம் கல்யாணி தாளம் ச. திருபுடை

பாலித்தருள் புரிவாய் பரம தயாகரீ
பாபசமனீ உந்தன் பாதம் பணிந்தேன் தேவீ —பா
பக்தபராதீனே நீ என்று நானுன்னே
பகலு மிரவுமாய் பக்திசெய்ய அறியேன்
பரம கல்யாணீ அம்பா பாலலோசனீ ராணீ — பா

[பாடி முடிந்ததும்]

கமலா! ரொம்ப நாழிகை யாகிவிட்டது போல் இருக்கிறதே! புஷ்பங்கள் பரித்துவிட்டாயா? அம்பிகைக்கு பூஜை செய்யவேண்டாமா?

கமலா:—அப்படியே செய்வோம் அம்மணி! — அதிருக்கட்டும்!— நான் தங்களை — ஒன்று கேட்கவிரும்புகிறேன். — இந்த மூன்று தினங்களாக விருதமிருந்து, அம்பிகையை அகோரமாக பூஜிக்கிறீர்களே! என்ன விசேஷம்.

மதன:—கமலா! உன்னிடம் நான் எதையும் சொல்ல ஒளிப்பேனு? என் ப்ராணேசர் அமரக ராஜன் அந்த கண்டத்திலிருந்து பிழைத்தாலும் பிழைத்தார், அடி! அவர் முன்போல் என்னிடம் அன்பு செலுத்துகிறதே யில்லே. இக் குறை காரணமாக வேதான் அம்பிகையைப் பணிகிறேன்.

கமலா:—ஓஹோ! சரிதான் — சமாசாரம் தெரிந்துகொண்டேன்! — ஆனல் அம்மா! தங்கள் மீது அரசருக்கு அன்பு குறைந்ததாக மட்டும் ஒரு போதும் நினைக்காதீர்கள். — ஏன்! — சற்று முன்புதான் நான் அரசரைக்கண்டேன்! அவர் தங்களைப் பற்றி ரொம்ப விஜாரித்தார் — அதிலிருந்தே இன்று அவர் கட்டாயம் தங்கள் அந்தப்புரம் வருவார் என்றே நினைக்கிறேன்.

மதன:—ஆமாம்! அவராவது இங்கே வருவதாவது! அடி கமலா! நானும் பார்க்கிறேன். ஒரு நாளா! இரண்டு நாளா! இந்த பதினைந்து நாளாக அவர் இங்கு அடியெடுத்தும் வைக்கவில்லை பட்டமகிஷி என்ற பெரிய பேரைத் தவிர வேறு என்ன அந்தஸ்திருக்கிறது எனக்கு [சற்று கோபத்துடன்] நீ சொல்வது போல் இன்று மட்டும் வரட்டும் அவர்! நான் அவருடன் பேசப்போவதே இல்லை.

கமலா:—அம்மா! இப்படி திடீரென்று அரசர் மீது இவ்வளவு அருவருப்புக் கொள்ளலாமா!—பாவம்!—அவர்தான் என்ன செய்வார்!— இந்த மட்டும் அவருக்குப்போன உயிர் திரும்பி வந்ததே!— அதுவே உங்கள் அதிர்ஷ்டமல்லவா?

மதன:— சரி, சரி, நீயும் அரசர் பக்ஷமாக பரிந்து பேச ஆரம்பித்து விட்டாயா? நான் இன்னமே வாழ்ந்தால் போல் தான்.

கமலா:—அப்படியல்ல அம்மணி! நான் சொல்வதைக் கொஞ்சம் கேளுங்கள். அவரிடத்தில், தங்களைப்போலவே மற்றவர்களும் அதிக பிரேமை செலுத்துகிறார்கள். எல்லோரையும் ஒரே காலத்தில் சந்தோஷப்படுத்த அவர் ஒருவரால் ஆகுமா? நீங்களே யோஜித்துப் பாருங்கள். தங்களைப் போல் பானுமதி முதலியவர்களும் அரசர் தன்னைத் திரும்பிகூட பார்ப்பதில்லை என்றுதான் என்னிடம் குறைந்துகொண்டார்கள். நேற்றைய தினம் மகாராஜா அவள் அந்தப்புறம் சென்றிருந்ததாக கேள்வி. இன்று தங்களிடம் வருவார்.

மதன:—கமலா! அவர் என்னைப் போலவே மற்றவர்களையும் பாவிப்பதற்காக நான் பொறாமை கொள்ளவில்லை — ஆனால் நான் என்னடி செய்வேன்!— வா, வா, எனக்கு அவரைவிட்டு கொஞ்சநேரம்கூட பிரிந்திருக்கக்கூடவில்லை. — அவர் அழகிலும், ஆண்மையிலும், முன்னைவிட நூறு பங்கு, ஏன்—ஆயிரம் பங்கு அதிகரித்த விளங்குகிறார். — அவரது லீலா விநோதத்தை — போடி, எனக்கு சொல்ல வெட்கமாக இருக்கிறது! [ஸுமதி வருகிறான்]

ஸுமதி:—[வணங்கி] மந்திரி ஸுவிசாரர் தங்களைத்தனிமையில் காண வந்திருக்கிறார்!— உத்திரவு!—

மதன:—சரி — வரச்சொல். கமலா! ஒரு ஆசனம் கொண்டுவந்து போடு. [மந்திரி வருகிறார்.] ஸாவிசாரரே! வரவேணும். அதோ அந்த ஆஸனத்திலமரும். என்ன விசேஷம்? — காலை வேளையில் ராஜாங்க காரியங்களை யெல்லாம் விட்டுவிட்டு என்னிடம் இங்கு தனிமையாக என்ன காரணமாக வந்தீர்?

ஸாவி:—அம்மணி! தங்களிடம் ராஜாங்க காரியமாகவே பேசத் தான் வந்தேன். அது மிகவும் ரகஸியமான விஷயம். தனிமை யாகவே சொல்லவேண்டும்.

மதன:—[கமலாவைப் பார்த்து] கமலா! பூஜைக்குவேண்டிய மலர் களை சென்று பறி. இதோ நானும் வருகிறேன்.

கமலா:—அப்படியே அம்மணி. [செல்கிறாள்]

மதன:—இங்கு ஒருவரும் நம்மைத்தவிர இல்லை. என்ன சமா சாரம்?

ஸாவி:-அம்மணி! நான் தெரிவிப்பது தங்களுக்கு ஏதேனும் அதிகப் பிரஸிங்கித்தனமாகத் தோன்றலாம். ஆனால் முடிவில் அதன் மகிமை தெரியும். சற்று பொறுமையுடன் கேட்டு நான் சொல்வதை யாரிடமும் வெளியிடாது ரகஸியமாக வைத்துக் கொள்ளவேண்டும்.

மதன:—மந்திரீ! இதென்ன இவ்வளவு கவலைப்படுகிறீர். என்ன விஷயம்?

ஸாவி:— அம்மணீ! ராஜாதி ராஜனுடைய கார்யங்கள் ரொம்பவும் அதிசயிக்கத் தக்கவைகளாக இருக்கின்றன. முன்பு இருந்த குணங்கள் எல்லாம் மாறி ராஜீகம் கம்பீரமாயும், ரொம்ப அழகாயும் நடத்துகிறார். எப்படி இந்த மாறுதல் ஏற்பட்ட தென்று எனக்கு விளங்கவில்லை இது விஷயமாய் நீங்கள் ஏதாவது இதுவரையில் தீர்மானித்தே இருக்கவேண்டும்.

மதன:—ஸபாஷ்! மந்திரி. நீர் சொல்வது முற்றிலும் உண்மையே. நான் தனித்து இருக்கும்போதெல்லாம் எனக்கு இதே விசாரம் தான். நீர் சொல்வது போலவே ஒவ்வொன்றிலும் உற்று நோக்கினல் பெரிய மாறுதல் காண்கிறது. என்ன காரணமாக இருக்கலாம்!— என்ன ஆச்சரியம்! முன்பு அவருக்கு ஸம்ஸ்கிருத அக்ஷரமே தெரியாது. இப்போது சரமாரியாக சுலோகங்களைப் பொழிகிறார்.

ஸுவி:— இவ்வளவு மாறுதல்கள ஒருவருக்குத் திடீரென்று எவ்விதம் ஏற்படும்! ஒருவருக்கு ரோக மேற்பட்டால் அது பல விதத்திலும் அவரது சக்தியைக் குறைக்கிறது இயற்கை. நம் அரசருக்கோ புனர் ஜன்மம் ஏற்பட்டது முதல் அவர், புத்தி, சக்தி எல்லாம் அதிசயமாக அதிகரித்துவிட்டதே.!

மதன:—மந்திரி! காரணமென்னவிருக்கலாம்? ஒரு வேளை என் மாங்கல்யத்தை காத்து ரக்ஷித்த அம்பிகையின் கிருபா கடாக்ஷத்தால் எல்லாம் இவ்விதம் விருத்தியடைந்திருக்கலாகாதா?

ஸுவி:—அம்மணி! எனக்கு வேறு விதத்தில் கூட ஸந்தேக மேற்படுகிறது!

மதன:—என்ன அது? மந்திரி — எதாயிருந்தாலும் யோஜிக்க வேண்டாம் — சொல்லும்.

ஸுவி:—சுருக்கமாக சொல்கிறேன். யாராவது யோகிகள் ராஜ யோகத்தை பரீக்ஷிக்கும் நிமித்தம் தம் சுயதேகத்தை விட்டு அரசர் சரீரத்தில் புகுந்திருக்கவேண்டும். நம், அரண்மனை ஜோஸ்யர் கூட இதையே அனுமானிக்கிறார்.

மதன:—[திடுக்கிட்டு] பிரதானியாரே! இது வாஸ்தவமாயிருந்தால் எனக்கு மிகவும் பயமாக இருக்கிறதே! அந்த யோகியால் நமக்கு ஏதேனும் கஷ்டம் ஏற்படுமோ! என்னைப் பிரஷ்டையாக்கிவிட்டாரா? — ஹா — நான் என்ன செய்வேன்.

ஸுவி:—[சிரித்து] அம்மணி! அதைப்பற்றி கவலைப்படவேண்டாம். லௌகிகத்தில் ஸர்வ நீதியும் தேகத்தை அனுசரித்திருக்கிறதே தவிர, ஜீவனுக்கு அவலக்ஷணமே கிடையாது. ஏனென்றால் சதி, பதி பாவம் முன் போலவே தங்கள் தேகத்திற்கும், தங்கள் பதி தேகத்திற்குமே இப்பொழுதும் இருக்கின்றது. ஜீவன் மட்டும் மாறியிருப்பதில் தங்களுக்கு தோஷம் கொஞ்சமும் கிடையாது. சிறிதும் ஸந்தேகம் வேண்டாம்.

மதன:— அம்மா! பிழைத்தேன். ஆனால் இன்னொரு விஷயத்தில் பயம் ஏற்படுகின்றதே. — அது வாஸ்தவமாக இருந்து திடீரென்று அந்த யோகி அரசர் கூட்டை விட்டு விட்டால் என்ன செய்வது?

மந்திரி—அம்மணி! அது விஷயத்தில் நான் எல்லாம் தயார் செய்து தங்கள் சம்மதத்தைப் பெறவே இங்கு வந்தேன்.

மதன:—என்ன ஏற்பாடு?

மந்திரி:—அந்த யோகி தன் சுய சரீரத்தை ஒருவருக்கும் தென் படாது காடு அல்லது மலைக்குன்று போன்ற நிர்மானுஷ்ய மான இடத்தில் அதி ரகஸியமாக ஒளித்து வைத்திருக்க வேண்டும். ஆகையால் நம் தூதர்களைவிட்டு எங்கும் தேடி எரிபடாத பிரேதம் எங்கிருந்தாலும் தீமூட்டி சாம்பராக்கி விடச் செய்தால், நமக்கு, பிறகு ஒருவித பயமுமில்லை.

மதன:—வெகு நல்ல யுக்தி! சீக்கிரம் சென்று அந்த காரியத்தை நிறைவேற்றுங்கள். அந்த தூதர்களை மாத்திரம் வெகு உஷாராகத் தேடி எல்லாப் பிரேதங்களையும் எரித்துப் போடும் படி கண்டிப்பாக உத்திரவிடுங்கள். தெரிந்ததா?

ஸசிவ:—இது விஷயத்தில் தங்களுக்கு கொஞ்சமும் கவலை வேண்டாம். எனக்கு விடை கொடுங்கள். போய் வருகிறேன் [செல்கிறுன்]

மதன:—ஆம்! இதன்படி செய்தால் என் நாதருக்கு அபாய மேற் படாது. நானும் நீண்டகாலம் சௌக்யமாக இருக்கலாம். நாழிகையாயிற்றே. எங்கே கமலாவைக் காணோம். [எழுந்து சுற்று முற்றும் பார்த்து] கமலா! கமலா!

கமலா:—[பூத்தட்டுடன் வந்து] இதோ வந்துவிட்டேனம்மா. பூஜைகளுக்கு வேண்டிய மலர்கள் எல்லாம் தயாரித்து விட்டேன்.

மதன:—நாமும் அரண்மனை திரும்ப நேரம் ஆகிவிட்டது. வா செல்வோம். [செல்கிறுர்கள்]

---

## அங்கம் 4.

### காட்சி 5.

[மதன மஞ்சரியின் அந்தப்புரம். மஞ்சத்தில் மதன மஞ்சரி உட்கார்ந்து பாடிக்கொண்டிருக்கிறுள். பக்கத்தில் அமாக ராஜனின் படம் இருக்கிறது. ஒரு புரம் ஊஞ்சல் தொங்குகிறது]

மதன:— மருலு கொன்னதிரா — மெட்டு. தாளம் ஆதி

வருவார் வருவார் என்று
வழிபார்த்திருந்தேனே
வகை மோசம் போனேனே
மன்னனை நம்பியே — வருவார்
நாழிகையும் ஆயிற்று நாயகன் வரக்காணேன்
நாரணியே உந்தனை நானுமே நம்பினேன் — வருவார்.

ஈச்வரி! உனக்கு என் பேரில் கொஞ்சமும் இரக்கமில்லையா? — நான் உன்னையே நம்பி இந்த ஒரு வார காலமாக என்ன தவம் புரிந்தேன்! — உனக்குச் சற்றும் இந்த அபலை மீது கிருபை வரவில்லையே. [திரும்பி படத்தை கையில் எடுத்துக் கொண்டு] ஆஹா! — என்ன அழகான வடிவம்! — அகண்ட நெற்றி — நீண்ட புருவங்கள். — விசாலமான கண்கள் — சிவந்த அதரங்கள் [முத்தமிடுகிறாள்] நாதா! நாதா! என்னுடன் பேசமாட்டீர்கள்? நான் எவ்வளவு நாட்களாய் உங்களை எதிர்பார்த்து, எதிர்பார்த்து ஏமாந்துவிட்டேன் — ஒவ்வொரு கணமும், தாங்களில்லாமல், ஒவ்வொரு யுகமாகவல்லவோ இருக்கிறது—தங்களுக்கு இன்னும் என்மேல் கிருபை வரவில்லையா? [மறுபடியும் முத்தமிடுகிறாள்] நாதா — நான் தங்களுக்கென்ன அபசாரம் செய்தேன். [அவஸரமாக கமலா வருகிறாள்.]

கமலா:—அம்மணி! என்ன இவ்விதம் உட்கார்ந்திருக்கிறீர்கள். அதோ அரசர் உங்களைக்காண வருகிறாரே!

மதன:—[திரும்பி, ஆச்சரியத்துடன்] நிஜமாகவா! என்ன கமலா! என்னிடம் விளையாடுகிறாயா என்ன? கமலா!

கமலா:—இல்லை அம்மணி. நிஜமாகத்தான். அதோ பாருங்கள் வந்துகொண்டிருக்கிறார். நான் ஒன்று சொல்கிறேன். அதன்படி நடந்தீர்களானால் இனிமேல் உங்கள் காதலர் உங்களை விட்டுப் பிரியவேமாட்டார்.

மதன:—அதென்ன கமலா? சீக்கிரம் சொல். [படத்தை ஒருபுறம் வைத்து மூடுகிறாள்]

கமலா:—அவர் வரும்பொழுது நீங்கள் சற்று மௌனமாகவே இருங்கள். அவர் உங்களை சமாதானப்படுத்த முயலுவார்.

அப்பொழுது தந்திரமாக தங்களை விட்டு அனுமதியின்றி பிறிவதில்லை என்று பிரதிக்ஞை வாங்கி விடுங்கள்.

மதன:—கமலா! இது சரியான யுக்திதான். அப்படியே செய்கிறேன்.

கமலா:—அதோ! அதோ! அரசர் வந்துவிட்டார். நான் வருகிறேன். சொன்னது ஞாபகமிருக்கட்டும் [ஒருபுறம் செல்கிறாள். மதனமஞ்சரி கோபமாக ஒரு புறம் உட்கார்கிறாள். அமரகன் வருகிறான்.]

அமர:—[திகைத்து,] கண்ணே, மதனு! மதனு! — என்ன பதிலைக் காணோம் [கிட்டே நெருங்கி] கண்ணே! நீ ஏன் ஒருவாறு உட்கார்ந்திருக்கிறாய்? உனக்கு ஏதேனும் அசௌக்யமா?

மதன:—ஐயோ!, போகட்டும் [முகத்தைத் திருப்பிக்கொள்கிறாள்.]

அமர:—இதென்ன கோபம்! மதனு! நான் என்ன அபராதம் செய்தேன். ஏன் என்னுடன் பேசமாட்டேனென்கிறாய்? யாரேனும் உன்னை அவமதித்தார்களா! [தோளைப்பற்றி] கண்மணி, மதனு? என்னைப்பார் [கையைப் பிடிக்கிறார்.]

மதன:—[கையை உதறிவிட்டு] குறைச்சலில்லை.

அமர:—[வாயில் விரலை வைத்து யோஜித்து] பெண்ணே! இதென்ன சாகஸம்! இன்ன விஷயமென்று தெளிவாகக் கூறாது இப்படி ஏன் நீயும் கஷ்டப்படுத்திக்கொண்டு என்னையும் தவிக்க விடுகிறாய்? உனக்கென்ன வேண்டும்? மதனு? இப்படிப்பார்.

மதன:—இந்த இரண்டு வாரமாக என் ஞாபகமே இல்லாது இருந்தவர்க்கு இப்பொழுது மட்டும் இங்கென்ன காரியம்? போகிறதானே பானுமதியிடமாவது, வேறு யாரிடமாவது.—

அமர:—[தலையை ஆட்டிக்கொண்டு] அறிந்தேன் இப்பொழுது. காதலி, என்ன நீயும் அறியாமற் பேசுகிறாய். உன்னிடம் எனக்கு இருக்கும் அன்பு மற்றவர்களிடம் இருக்குமா — நீ என் பட்டமகிஷி அல்லவா? கண்ணே!—உன் மனதிற்கு மாறாக நான் நடப்பேனா? — உனக்கு என்ன வேண்டும்? — இன்னும் உயர்ந்த ஆடையாபரணங்கள் வேண்டுமா? நீ எது கேட்டாலும் நான் கொடுக்க மறுப்பேனா?

மதன:—எனக்கு ஆடையும் வேண்டாம். ஆபரணமும் வேண்டாம். இப்பொழுதே ஒருவரம் கொடும்.

அமர:—இதோ தந்தேன் [கையடித்துக் கொடுக்கிறான்] இப்போது சரிதானே.

மதன:—[எழுந்து கைகளைப் பிடித்துக்கொண்டு] நாதா — எனக்கறிவிக்காமல் என் மனச்சம்மதமின்றி மற்ற அந்தப்புரங்களுக்கு போகக்கூடாது. இதுதான் நான் கேட்டுக்கொள்வது [அவனைப் பிடித்தபடியே முழங்காலால் மண்டி யிடுகின்றாள். அமரகன் அவளை அப்படியே பிடித்து அணைத்துக் கொண்டு]

அமர:—பூ! இவ்வளவுதானே. பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று. [கட்டிலில் உட்காருகிறார்கள்] கண்ணே! சாமுத்ரிகா சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட நால் வகைப் பெண்களுள் உத்தமமான பத்மினி ஜாதிக்கு ரத்னம் போன்றவளே! சூரியனைக் கண்டதும் தாமரை மலர்வது போல் பகலிலே மலரும் உன்னைக் காணவே நான் இப்பொழுது வந்தேன். [அவள் கையில் முத்தமிடுகிறான்] உன்னிடத்தி லன்றி மற்ற ஸ்திரீகளிடத்தில் என் பிரேமை நிலை நிற்குமோ.

மதன.—நாதா! கோடிஸூர்யனை தங்களைக் கண்டதும் பகலாயிருந்தாலென்ன? இரவாயிருந்தாலென்ன? அப்பொழுதே மலராதோ என் மனம்! — போதும் — போதும் நாதா! — வாருங்கள் அந்த ஊஞ்சலில் சற்று அமர்ந்து ஆடுவோம். நாதா! நான் விளையாட்டாக பேசினதை யெல்லாம் மறந்துவிடவேண்டும்.

அமர:—காதலி! — உன் பேரில் எனக்கு ஒருநாளும் கோபம் வராது. உன்னிஷ்டப்படி ஊஞ்சலாடுவோம் வா. [இருவரும் ஊஞ்சலாடுகின்றனர்] மதனு! இவ்வேளையில் மந்தமாருதம் “ஜில்” என்று வீசுவது நமக்கு என்ன ஆனந்தத்தை உண்டு பண்ணுகிறது. பார்த்தனையா? [பாடுகிறார்கள். அனுபந்தம் பார்க்க] யாரடா அங்கே? [சேவகன் வருகிறான்]

சேவ:—மகாராஜ்!

அமர:—நம் நடன மாதரை அழைத்துவா.

சேவ:—உத்திரவு [வெளியே செல்கிறான்]

மதன:—நாதா! நான் இப்பொழுதுதான் சொல்லவேண்டுமென்றிருந்தேன்; நீங்களே உத்திரவு பண்ணிவிட்டீர்கள். [நடன மாதர் பிரவேசித்து நடனமாடுகின்றனர்]

மதன:—[வெற்றிலே, பாக்கு மடித்து] நாதா! இந்தாருங்கள் தாம்பூலம்.

அமர:—[வாங்கிக்கொண்டு] ப்ரியே! இவர்கள் நடனத்தைக் கண்டால் ஊர்வசி முதலானோருங்கூட வெட்கமுறுவது நிச்சயம். [சேவகன் வருகிறார்]

சேவ:—மகாராஜ்! மந்திரி வந்திருக்கிறார்.

அமர:—சரி வரச்சொல். [சேவகன் செல்கிறான். ஸசிவசாரர் வருகிறார்]

ஸசிவி:—அரசே [வணங்குகிறார்]

அமர:—மந்திரி என்ன! ஏதாவது அவஸரமான கார்யமா? நான் இங்கு வந்துவிட்டதால் ஏதாவது தவக்க மேற்பட்டதா?

ஸசிவி:—அதெல்லாம் ஒன்றுமில்லே. வெகு தூரத்திலிருந்து ஒரு கவிவாணர் வந்திருக்கிறார். தங்களேக்காணவேண்டுமென்கிறார். நன்றாக பாடுபவர் போல காண்கிறார்.

மதன:—நாதா! நல்ல சமயத்தில் வந்திருக்கிறார். நாம் சற்று நேரம் இனிமையான கானம் கேட்கலாமல்லவா?

அமர:—மந்திரி! இவ்விடம் ஒரு ஆசனம் போடச் செய்து அவரை தக்க மரியாதையுடன் அழைத்து வாரும்.

மந்திரி:—சேவகா! அவரை உள்ளே அழைத்துவா.

சேவ:—அப்படியே [போகிறான். கவிவாணர் முன்வர, பின்பு சேவகன் ஒரு ஆஸனம் கொண்டு வந்து போடுகிறான். கவிவாணர் அரசனே வணங்கிவிட்டு அமர்கிறார். கமலா அரசியிடம் சென்று நிற்கிறாள்]

அமர:—சந்தோஷம். ஓர் இனிமையான கவி பாடும் கேட்போம்.

கவிவாணர்:—[பாடுகிறார்] [அமரகன் வெற்றிலேயை போட்டு மெல்லுகிறான்]

காதே காந்தா கஸ்தே புத்ர : ஸம்ஸாரோயம் அதீவ விசித்ர :
கஸ்யத்வம் க: — குத ஆயாத : தத்வம் சிந்தய யதிதம் ப்ராந்த:
மாகுரு ஜனதன யௌவன கர்வம் ஹரதிநிமேஷாகால: ஸர்வம்
மாயாமயமிதம் அகிலம் ஹித்வா ப்ரம்ம பதம் த்வம் ப்ரவிச விதித்வா

[பாட்டு முடிந்ததும் அரசன் திடீரென்று வெற்றிலைச்சார் பொறை யேறின பாவனையாக மூர்ச்சித்து சாய்கிறான்]

மதன:— ஹா! ஐயோ! இதென்ன நாதர் விழுந்து விட்டாரே.

கவி:—அம்மணி! வெற்றிலைச்சார் தலைக்கேறிவிட்டதோ என்னமோ. முகத்தில் கொஞ்சம் பன்னீர் தெளியுங்கள். [மந்திரி, முதலானோர் அரசனைச் சூழ்ந்துகொள்கின்றனர்]

மந்திரி:—சேவகா! சீக்கிரம் சென்று வைத்தியரை அழைத்துவா [சேவகன் செல்கிறான். கவிவாணரும் செல்கிறார்.]

மதன:—ஹா! தெய்வமே! இதுவும் உன் சோதனையோ! எப்படியாவது என் மாங்கல்யத்தைக் காப்பாற்று. ஜகதம்பிகே! நீதான் இந்த ஆபத்தை நீக்கவேணும். [சேவகன் வைத்யருடன் வருகிறான்.]

மந்திரி:—அம்மணி! கவலைப்படவேண்டாம். இதோ நம் வைத்தியர் வந்துவிட்டார். இனிப் பயமில்லை. [வைத்தியர் அரசன் கையை பார்க்கிறார்.]

வைத்யர்:—[முகத்தைச் சுளித்துக்கொண்டு] சற்று முன்பே என்னை அழைத்திருக்கக்கூடாதா? — உயிர் — உடலைவிட்டு — நீங்கி விட்டதே!

மதன:—ஹா! — இறந்தனரா! — ஐயோ! — நான் மாபாவியானேனே! — என்னைத் தவிக்கவிட்டுச் சென்றீரே — இதோ — நானும் — உம்முடன் [மூர்ச்சித்துவிழ, கமலா தாங்கிக் கொள்கிறாள். வருகிறேன் இதோ!!

---

## அங்கம் 5.

### காட்சி 1.

[மலைக்குகை. ஒருபுறம் சங்கரரின் உடல் மூடப்பட்டிருக்கிறது. ஆனந்தகிரி காவல்காத்துக்கொண்டு அங்குமிங்கும் உலாவுகிறார்.]

ஆன:—என்ன ஆச்சரியம்! இந்த லோகத்தில் ப்ராணன் இல்லாத ஒரு சரீரமானது சேர்ந்தாப்போல் சிலநாட்களுக்கு இருந்

தால் தூர் நாற்றமெடுத்து அழிவது சகஜம். — இன்றோடு கிட்டத்தட்ட ஒருமாதம் பூர்த்தியாகிறது. கொஞ்சமேனும் நாற்றமோ, மற்றபடி அருவருக்கத்தக்க ஒன்றும் இல்லையே! — ஆஹா! அந்த முகதேஜஸ் கொஞ்சமும் குன்றாது அப்படியே இருக்கிறதே. — யோகசக்தியின் மகிமையே மகிமை. [சற்று யோஜித்து,] சரி. நம் குரு காட்டிக் கொடுத்தபடி யோக மார்க்கமாகச்சென்ற பத்மபாதரையும் காணோமே. எங்கு சென்றிருக்கிறாரோ! — எப்பொழுது வருவாரோ என்று ஒன்றுமே தெரியவில்லையே — உம் — சரி. இருக்கட்டும். இந்த குன்றின் மீதேறி பத்மபாதர் வருகின்றாரா என்று கவனிப்போம். [வெளியே செல்கிறார்]

[மறு வழியே துன்மதியும், ஒரு சேவகனும் வருகிறார்கள்.]

துன்மதி:—ஏண்டா அண்ணே, இப்போ இதோ ஒரு சந்நாசி என்னமோ முணுமுணுத்துட்டுப் போறாரே அவர் யாருடா? வாடா அங்கே போவோம்.

சேவ:—என்னடா போடா — நம்பளும் தான் சுத்தரம், சுத்தரம் காடு மேடெல்லாம் சுத்திட்டோம். ராஜாங்கத்திலே வேறே ஏதாச்சி வேலெசெய்ய சொல்லுவாங்க. இந்த மந்திரி ஈக்கிறாரே. — அவர் மந்திரியா! — சே — சே — மந்திதாண்டா. என்னடான்னு நம்பளெ இந்த பொணஞ்சுடற வேலெ பாக்கச் சொல்றாரு. அதுவும் ஒத்தருக்கும் தெரியக்கூடாதாம் — நம்மாலே முடியாதுடா — கால் கயண்டுபோச்சு — இன்னமே ஒரு அடிகூட எடுத்துவைக்கமாட்டேன். [உட்கார்கிறான்] நீ வேணா போ.

துன்:—சே. சே. அப்படி செய்யாதேடா. அப்புறம் நம்ப தலேயே பூடும்.

சேவ:—போனாப்போவதுடா! போடா. நம்ப இன்னமே அரமனெக்கி திரும்பி போகவே வாண்டாண்டா. நம்பளும் தான் இத்தினி நாளாசுத்தினோமே, ஏதாவது ஒரு பொணம் கண்ணிலே பட்டிச்சா. எங்கனச்சிந்தான் கிடைக்குமா? காக்காகூடனா ஒண்ணு செத்துப்போனா மத்ததெல்லாமா சேந்துகிட்டு தூக்கிகிட்டு போயிடுது. மனிசன் பொணம் எங்கயாவது கிடைக்குமா? அப்பா [காலைப் பிடித்துக்கொள்கிறான்:]

துன்:—இல்லேடா அண்ணே. நம்ப ஒவ்வொரு குகையிலேயும் தேடினோமே எங்கயாவது ஒரு மனிசனைப் பாத்தோமா. இல்லே. இங்கேமட்டும் ஒரு சந்நாசி இருந்தாரே — இரு, இரு. [சுற்றுமுற்றும் பார்த்து, மூடப்பட்டிருக்கும் ஆசார்யாளின் உடலின் அருகே சென்று] டேய் நம்ப பொழச் சோண்டா.

சேவ:—[திரும்பிபார்த்து] என்னடா. என்டாது பொணமா?
[எழுந்துகிட்டே ஓடுகிறான்]

துன்:—ஏய்! சத்தம் போடாதேடா. யாராச்சி வந்துடப்போறா. வேலையை சீக்கிரம் முடிச்சுகிட்டு ஓடிப்போயிடணுண்டா
[இருவரும் உடலை தீமூட்டிவிட்டு ஓடுகின்றனர்.]

ஆன:—[சபையை பார்த்துக்கொண்டேவந்து அதோ பத்மபாதர் வருகிறார். அவர் வந்ததும் ஆசார்யாள் விஷயம் விளங்கிவிடும். [திரும்பி பார்த்து] ஐயோ! இதென்ன! யார் தீவைத்தது. [ஓடி சிதையைக்கலைத்து] நல்லவேளை! — ஒன்றும் தீங்கில்லே. சற்று தாமதித்திருந்தால், — மகாபாபம்! — குருத்ரோகத்திற்கன்றோ ஆளாகியிருப்பேன். [பத்மபாதர் வருதல்]

பத்ம:—[திகைத்து] ஹா! ஆனந்தரே! என்ன அங்கே! ஏதாகிலும் விபத்து நேர்ந்ததா?

ஆன:—ஒன்றும் பயமில்லே. சற்றுமுன்புதான் இம்மலைச்சிகரத்தில் ஏறி உம் வரவை எதிர்பார்த்தேன். அதற்குள் யரோ ரஹஸியமாகவந்து இந்த உடலைத்தீமூட்டிச் சென்றிருக்கிறார்கள். நல்ல வேளையாய் தீ உடலைப்பற்றுமுன் நான் வந்துவிட்டேன். நீரும் வந்துசேர்ந்தீர். அதிருக்கட்டும் நீர் எங்கு சென்றீர்? என்ன சாமாசாரம்.

பத்ம:—இங்கிருந்து கிளம்பி நேரே அமாக தேசம் சென்றேன் ஒரு கவிபாடுபவன் என்று மந்திரியிடம் அறிமுகப்படுத்திக்கொண்டு அமாக அரசரை ராணி மாலில் மிகுந்த சிரமத்துடன் சந்தித்தேன். அவர் இனிமையான பாட்டு ஒன்று பாடும்படி உத்திரவிட்டார். குரோ! தாங்கள்தான் காப்பற்றவேணும்னு மனதிலே த்யானித்ததுதான் எனக்கு தெரியும் பாட்டு பாடினதா, போனதா ஒன்றும் சிறிது நாழிகை தெரியவில்லே.

ராஜாதி ராஜன் திடீரென்று மூர்ச்சித்து விழுந்தார். எனக்கு தூக்கிவாரிபோட்டது. எனக்கும் அப்போதான் பிரக்ஞை வந்தது. உடனே ஒரே குழப்பமா போச்சு. நம்மகுரு காட்டிக் கொடுத்தபடி யோகமார்க்கமாக ரொம்ப கஷ்டப்பட்டு இங்கு வந்தேன். அதோ — அதோ பார்—ஆசார்யாள் எழுந்திருக்கிறார்கள்.

சங்க:—[ஸ்தோத்திரம் செய்துகொண்டே எழுந்திருக்கிறார்.]

ராகம் ஆனந்த பைரவி

ஸ்ரீமத் பயோநிதி நிகேதன சக்ரபாணே,
போகீந்த்ர போக மணி ரஞ்சன புண்ய மூர்த்தே |
யோகீச சாத்வத சரண்ய பவாப்தி போத,
லக்ஷ்மீ ந்ருஸிம்ம மமதேஹி கராவலம்பம். ||
அந்தஸ்ய மே ஹ்ருத விவேக மஹாதனஸ்ய,
சோரை: ப்ரபோ பலிபிரிந்திரிய நாமதேயை: |
மோகாந்தகூப குஹரே விநிபாதிதஸ்ய,
லக்ஷ்மீ ந்ருஸிம்ம மமதேஹி கராவலம்பம். ||

நாராயண! நாராயண! சிஷ்யர்காள்! விஷயமோகமானது என்னையும் சற்று மயங்கச்செய்துவிட்டது. ஆயினும் நீங்கள் எடுத்துக்கொண்ட சிரத்தையில் நான் பூர்வ சரீரம் பெற்றேன். இனி தாமதிக்கலாகாது. இப்பொழுதே மண்டனரில்லம் சென்று ஸரஸவாணியை வாதிற்கழைத்து அவளது கர்வத்தை அடக்க வேண்டும். வாருங்கள் செல்வோம்.

["நாராயண" சப்தத்துடன் செல்கிறார்கள்.]

---

## அங்கம் 5.

### காட்சி 2.

[மண்டனமிச்ரர் வீடு. ஸரஸவாணி தனிமையாக பேசிக்கொண்டிருக்கிறாள்,]

ஸரஸ:—இன்றோடு நான் அந்த யதிக்கு கொடுத்த அவகாசம் முடிவடைகிறதே! ஹா! என்ன சீக்கிரம் ஓடிவிட்டது, இந்த ஒரு மாதகாலமும்! — இன்று மட்டும் அந்தயதி வாராமல் இருப்பாராகில் — ஆ! — நான் என்ன பாக்கியவதியாக இருப்

பேன்! — எப்படி இருந்தென்ன? அந்த பாழும் வாதத்தில் என்பதி தோல்வியடைந்தாலும் அடைந்தார், அதற்குப்பின் என்னுடன்கூட சரியாக பேசுவதுகூட இல்லையே! [மண்டனர் பிரவேசம்] நாதா! நாதா!

மண்ட:—[மௌனமாக காதில் விழாததுபோல் யோஜனை செய்கிறார்.]

ஸரஸ:—நாதா! நான் கூப்பிடுவது தங்கள் காதில் விழவில்லையா? தாங்கள் ஏன் என்னிடம் முன்பு இருந்ததுபோல் அன்புடன் நடந்துகொள்வதில்லை. உங்களுக்கு ரொம்பவும் பிரியமான ஸ்நானஸந்த்யாதி கர்மாக்களைக் கூடச்சரியாகச் செய்யாமல் இருக்கிறீர்களே! ஏன் நாதா?

மண்ட:—[சிரித்துக்கொண்டே] ப்ரியே! எப்போது வாஸ்தவமான தத்வம் அறிந்தேனோ அதுமுதல் இந்த ஸம்சார விஷயங்கள் எனக்கு சாரமற்று விஷமாய் தோன்றுகின்றன. அந்தப்பரம தயாளுவான அந்த ஸத்புருஷனிடமேயே சென்றுவிட்டது என் மனதும் — ஹும் — ஞானமில்லாத ஜன்மம் என்ன ஜன்மம். வைராக்யம் அடைவதே சித்த சுத்திக்கு காரணம்.

ஸரஸ:—ஹா! நாதா! தங்களுக்கென்ன பைத்யமா பிடித்துவிட்டது நாதா! புத்தி, பௌருஷம் இவைகளில்லாத அங்கவீனர்களுக்கும், கிழங்களுக்குமன்றோ சன்யாசமும், பக்தியும், ஞானமும்! நன்றாயிருக்கின்றது. வாருங்கள் உட்செல்வோம் [பாடுகிறாள் அனுபந்தம் பார்க்க]

["நாராயண" சப்தத்துடன் சங்கரரும், சிஷ்யர்களும் பிரவேசம். ஸரஸவாணி திடுக்கிடுகிறாள்.]

சங்:—ஹே! தேவி! இப்பொழுது உமது கேள்விகளுக்குச் சமாதானம் சொல்கிறோம்:—

ஸரஸ:—[வந்தனம் செய்து] ப்ரபோ! எனக்கு இப்பொழுது எல்லாம் விளங்கிற்று. தாங்கள் ஸர்வ வித்தைகளுக்கும் ஈசுவரன். ஆனால் ஸ்திரீகள் பதிகளிடம் எவ்விதம் நடந்துகொள்ளவேண்டுமென்பதை ப்ரஸித்தி செய்யவேண்டியே இப்படி தங்களை கேள்விகள் கேட்டேன். — ஹே யதே!— இதோ என்பதி. அவருக்கு உங்கள் இச்சைப்படி ஸன்யாசம் கொடுங்கள். ஒருபுறம் சென்று எனக்கு முன்பு ஏற்பட்டி

ருந்த சாபமும் உம்மால் இன்று விமோசனம் ஆயிற்று. எனக்கு சத்ய லோகம் செல்ல விடை கொடுக்கவேண்டும்.

சங்:— ஹே ஸரஸ்வதி! நீ என் அத்வைத மதம் என்றென்றும் பூலோகத்தில் இருக்குமாறு அங்கங்கு ப்ரஸன்னமாக இருந்து நம் சிஷ்ய பரம்பரைகளை பூர்ணமாக அனுக்ரஹித்து அவர்கள் வாக்கிலிருந்து பிரகாசிப்பாயாக.

ஸரஸ:—[திரைக்குள்] தங்கள் ஆக்ஞையை மீறுபவர் யாரும் உளரோ! அப்படியே. தங்களுக்கும் தங்கள் சிஷ்ய பரம்பரைக்கும் "ஸரஸ்வதி" என்னும் பட்டம் இருக்குமாறு அங்கீகரிக்க வேணும்.

சங்:— அப்படியே.

மண்ட:—[ஆசார்யாளின் அடி பணிந்து] ஸத்குரோ! எனக்கு சன்னியாஸ தீக்ஷை அளித்து பாவனமாக்க வேண்டும்.

சங்:—நல்லது. இனி செய்யவேண்டுவதும் அதுதான். [சிதாபாஸரைப்பார்த்து] நீ மண்டனரை அழைத்துப் போய் முண்டனாதிகள் செய்வி — இதோ நானும் வருகிறேன்.
—அப்படியே [மண்டனர், சிதாபாஸர் வெளியே செல்கிறார்கள்]

சங்:—[பத்மபாதரைப்பார்த்து] பத்மபாதரே! பெரிய கார்யம் முடிந்தது ஸகல கர்ம மார்க்க பிரவர்த்தகர்களுக்கும் ஸார்வபௌமரான மண்டனரைச் சிஷ்யராக்கிக்கொண்டோம் இனிமேல் திக் விஜயத்திற்கு கிளம்பவேண்டும். நீ இப்பொழுதே ஸுதன்வாவிடம் சென்று என் ஆக்ஞையைத் தெரிவித்து சதுரங்க சைன்னியத்தோடு வந்து சேரும். நாங்கள் இங்கேயே இருக்கிறோம். சீக்கிரமாக வரவேண்டும்.

பத்ம:—குரோ! ஆக்ஞைப்படி அழைத்து வருகிறேன் [செல்கிறார்].

சங்:—[மற்றவர்களை நோக்கி] மண்டனருக்கு சந்யாஸ தீக்ஷை செய்விப்போம் வாருங்கள். ["நாராயண" சப்தத்துடன் செல்கிறார்கள்.]

## அங்கம் 5.

### காட்சி 3.

[காலடியில் ஆர்யாம்பாள் வீட்டில் பலகையின் மேல் ரொம்பவும் சிக்காய் படுத்துக்கொண்டிருக்கிருள்]

ஆர்யா:—ஹா! அம்பா? எனக்கு அந்த்ய காலம் சமீபித்துவிட்டதே — பேச முடியவில்லையே — நா எழவில்லையே — என் ஆவி போகுமுன் குழந்தை சங்கரனை கண்டால் தான் — என் ப்ராணன் நீங்கும் — நெஞ்சும் வேகும் — சங்கரா! — சங்கரா! — நீ வாக்களித்தபடி ஏன் என்னிடம் வரவில்லை. — கடைசி காலத்தில் — நினைத்ததும் — வருகிறேன் — என்றுயே — உன்னை காண்பேனோ — சங்கரா — சங்கரா — சங்கரா — [சங்கரர் யோக மார்க்கமாக பாடிக்கொண்டே வருகிறார்] அனுபந்தம் பார்க்கவும்.

சங்க:—[துக்கத்துடன்] ஆஹா! ஒன்பது மாத காலம் இந்த சரீரத்தை சுமந்து வெகு கஷ்டப்பட்டு காப்பாற்றிப் பெற்றெடுத்தவளல்லவா இவள்! — ஏன் தனிமையில் படுத்திருக்கிருள்? எங்கே ஸுபுத்ரனைக்கூட காணோம்! [கிட்டே நெருங்கி] அம்மா! இதோ உன் சங்கரன் — சன்யாஸியான புத்திரன் வந்திருக்கிறேன். அம்மா! கண்விழித்துப் பாருங்கள்.

ஆர்யா:—ஹா — சங்கரா! — [இரண்டு கைகளையும் விரித்து] குழந்தாய்.

சங்:—[கண்களில் நீர் ததும்ப] இப்பொழுதாவது — உன்னைப் பார்க்க கொடுத்து வைத்தேனே — அம்மா — இந்த கஷ்ட திசையில் தங்கள் பந்துமித்ரர்கள் ஒருவரும் ஆதரிக்கவில்லையா? [ஸுபுத்தன் வருகிருன்]

ஸுபு:—[ஓடி வந்து, நமஸ்கரித்து] சங்கரா (ஐய்யயோ) கன்னத்திலே போட்டுக்கொண்டு] ப்ரபோ, வரவேணும்.

சங்க:—ஸுபுத்ர — தாயைத் தனியேவிட்டு எங்கு சென்றிருந்தாய் நம் பந்துமித்திரர்கள் ஒருவரும் வரவில்லையா?

ஆர்யா:—சங்கரா!— வேண்டாம் — எதற்காக அவர்கள் — பேச்சு — இப்பொழுது. அச்சண்டாளர்களை — நினைத்தலும் தீது. — குழந்தாய் — எனக்கு—என்னமோ—செய்கிறதே.

ஸ்பு:—அம்மா. என்னவேண்டும்.

சங்க:—அம்மா! இது உன் அந்தய காலம். நீ கண்ணை மூடிக்கொள் சிவத்யானம் தவிர வேறொன்றிலும் மனதை செலுத்தாதே. நான் ஸ்தோத்திரம் செய்கிறேன். உத்தமமான கதியை அடையவாய்.

ராகம் : மோகனம். தாளம் கண்டஜாதி சாபு,

பசூனும் பதிம் பாப நாசம் பரேசம்
கஜேந்த்ரஸ்யக்ருத்திம் வஸானம் வரேண்யம்.
ஜடாஜூட மத்யே ஸ்புரத் காங்க வாரிம்
மஹாதேவ மேகம் ஸ்மராமி ஸ்மராமி.

ஆர்யா:—ஹா! —இதென்ன பயங்கரமான ரூபம். — சங்கரா — வேண்டாம் — வேண்டாம்.

சங்:—[புன்னகையுடன்] சரி அம்மா — மறுபடியும் கண்ணை மூடிக்கொள்ளுங்கள். பயப்படவேண்டாம்.

பீதாம்பர பரிதாஞ ஸார கல்யாண விதாஞ
நாராயண நாராயண ஜய கோபாலஹரே.
மஞ்சுள குஞ்சா பூஷா மாயா மானுஷ வேஷா
நாராயண நாராயண ஜய கோபால ஹரே.

ஆர்யா:—ஆஹா — என்ன ரூபம் — என்ன காந்தி — என்ன பிரகாசம் — அச்சுதா, — அனந்தா — கோவிந்தா — ராமா — [இறக்கிருள்]

ஸ்பு:— ஹா! அம்மா — அம்மா — [அழுகிருன்]

சங்:—ஸ்புத்தா! — என்ன சிறு குழந்தை போல் அழுகிருய் — சீக்கிரம் சென்று நம் ஞாதிகளுக்கு தெரிவித்து அழைத்து வா. போ. [ஸ்புத்தி செல்கிருன்]

சீ — நான் மகா விரக்தனுக இருந்தும் எனக்குக்கூட இந்த மாத்ரு வியோகம் இவ்வளவு வேதனையை உண்டு பண்ணுகிறதே — என்னமோ செய்கிறதே — நானே இப்படி அவஸ்தைப்பட்டால் பாமரர்கள் கதிதான் என்ன? [ஸ்புத்தன் அழுதுகொண்டே வருகிருன்] என்ன ஸ்புத்தா! எங்கே அவர்கள்?

ஸ்பு:—ப்ரபோ! அவர்கள் தங்களையும், தங்கள் தாயாரையும் கண்டபடி திட்டி, ஒருவிதமான உதவியும் செய்ய முடியாதென்று வர மறுத்து விட்டார்கள்.

சங்:—ஹாஹா! ஹே! தேவா! இவர்கள் மனுஷ்யர்கள் தானா? இது தெய்வ ஸம்மதமாகுமா? சரி, ஸுபுத்ரா. இப்பொழுது வீட்டிலுள்ள கட்டைகளை அடுக்கி உத்தமியாகிய இவளது இடது கையை கடைந்து அக்னியுண்டாக்கி இங்கேயே தகனம் செய்வோம். — என்னையும், என் தாயையும் ப்ரஷ்டர்கள் அன்று தூஷித்த அவர்கள் எல்லோரும் இன்று முதல் ப்ரஷ்டர்களாகட்டும். இன்று முதல் ஸ்மசானம் அவர்கள் வீட்டு புழக்கடையிலேயே இருக்கட்டும் இது என் சாபம். — சீக்கிரம் மேலே ஆகவேண்டிய கார்யத்தைச் செய்கிறேன்.

---

## அங்கம் 5.

### காட்சி 4.

[தெருவீதி. ஒரு வயோதிக ப்ராம்மணனும், அவருடைய ஜடமான பையனும் நிற்கிறார்கள். எதிரில் ஒரு சாஸ்திரிகள் வருகிறார்.]

சாஸ்திரி:—ஓய்! சுவாமிகளே! உங்களைப் பார்த்தா ரொம்ப வயசான வாளாயிருக்கேளே — இது யார் இந்த பையன்? — உங்கள் பையனா? — என் இப்படி நிற்கிறான்? — குழந்தை! உன் பேர் என்ன அப்பா?

பையன்:—[கண்ணை மூடித்திறந்து. அசட்டு விழிவிழிக்கிறான்]

சாஸ்:—என்னடா, கேக்கறேன்; பேசாமே இருக்காயே. வயசு குட்டிச்சுவருக்கு ஆராப்பலே, இருபதாயிருக்கும்போலேருக்கு. பாப்பாக்கு பேர்செல்லக்கூட தெரியல்லையோ — மடையா! — சீ — உன்னோடு என்ன பேச்சு — [திரும்புகிறார்.]

கிழவர்:—ஹா! ஈசுவரா! இதுவும் என் பாபம் — என் அருமைக் குழந்தை — இவனை இந்த கோலத்தில் வைத்துவிட்டீர் — ஹா! உத்தமமான ப்ரும்மண குலத்துதித்த என் ஒரே புத்திரனாகிய இவன் இப்படி ஜடமாக இருப்பதற்கு வருந்துவதா! இல்லை இந்த வழிப்போக்கர்கள் கண்டபடி பரிகசிப்பதைக் குறித்து வருந்துவதா!— அல்லது என் விதியை நோவதா!— என்னால் பொறுக்கமுடியவில்லையே.

சாஸ்:—[கோபத்துடன்] ஓய்! ஓஹோ! என்னங்கணும். என்னென்னமோ கண்டபடியெல்லாம் என்னைத் திட்டுரீரே — ஹும் — உம்மையும், உம்ம பிள்ளையையும் ஒரு வார்த்தைகூட கேட்கக்கூடாதோ.

கிழ:—ஸ்வாமிகளே! நான் உங்களை ஒன்றும் சொல்லவில்லை. என் விதியை நினைத்து நொந்துகொண்டேன். இதுவழியாக அந்த மகாபுருஷன் —சங்கராசாரியார் — திக்விஜயம் செய்து கொண்டு போவதாகக் கேள்விப்பட்டேன். அவரை தரிசித்தா லாவது பிணிசிறிதாவது நீங்கும் என்றுதான் காத்துக்கொண் டிருக்கிறேன். தங்களை நான் ஒன்றும் நிந்திக்கவில்லையே.

சாஸ்:—ஓஹோ! அப்படியா சமாசாரம். அப்படி முன்னாலேயே சொல்லப்படாதோ! நல்ல யோஜனைதான். இங்கேபாரும். எனக்கு ஒரே பெண். ஏதோ சங்கா தோஷத்தால் இந்த ஒரு வருஷமாக ரொம்ப ஹிம்ஸைப்படுகிறாள். என்னமோ எல்லா ரும் அவரைப்பத்தி பெரிசா சொல்லிக்கிறாளே பார்க்கலாம்னு நினைச்சேன். அதான் நானும் வந்தேன்.

கிழ:—சாஸ்திரிகளே! அவர் ரொம்ப யோகசக்தியுடையாவராம். பெரிய பெரிய மதவாதிகளை யெல்லாம் ஜயித்துவிட்டாராம். இதுவரையில் மூணுதடவை இந்த பாதகண்டம் முழுதும் சுத்தி ஜயக்கொடி நாட்டிண்டு வாராராமே.

சாஸ்:—ஆமாங்கணும் ஆமாம். அப்படித்தான் எல்லோரும் சொல் லிக்கிறாள். கிரகசன், அபிநவகுப்தன் போன்ற பெரிய பெரிய மாந்திரீகாள் பாச்சா எல்லாம்கூட அவர்கிட்டே பலிக்கல்லை யாம். அதான் நான் கொஞ்சம் விபூதி பிரசாதம் வாங்கிண்டு போகலாம்னு வந்தேன். — அவர் ஒரு பெரிய அவதார புரு ஷர்தான் என்கிறார்கள். — அதோ — அதோபாரும் கூட் டத்தை —அதோ அவாள்ளாரும் வந்துட்டாளே. அடாடா என்ன பாட்டு, என்ன பாட்டு.

[சங்கரரும், மண்டனரும் வருகின்றனர். சிஷ்யர்களும், சேவகர்களும் பாடிக்கொண்டு வருகின்றனர். கிழவர் சாஷ்டாங்க மாக சங்கரரை நமஸ்கரிக்கிறார்.]

ராகம் சுருட்டி தாளம்: சாபு (மிச்ரம்)

வேத வானில் விளங்கி "அறஞ்செய்மின்
சாதல் நேரினுஞ் சத்தியம் பூணுமின்
தீதகற்றுமின்" என்று திசையெல்லாம்,
மோத நித்தம் இடித்து முழங்கியே —சங்கராசிவ.
ஒப்பில்லாத உயர்வொடுகல்வியும்
எய்ப்பில் வீரமும், இப்புவியாட்சியும்
தப்பிலாத தருமமுங் கொண்டுயாம்
அப்பனே நின் னடி பணிந்துய்வமால் — சங்கராசிவ.

[பாரதியார் கிருஷ்ணன் துதி]

கிழ:— [எழுந்து கைகூப்பி] ப்ரபோ! தாங்கள்தான் ரக்ஷிக்கவேணும். எனக்கு இதோ இந்த ஒரே குழந்தைதான் — பிறந்தது முதலே இப்படியே ஜடமாக இருக்கிறான். வயதோ பதினைந்தாகிவிட்டது — இன்னும் உபநயனம் செய்விக்கவில்லை. எப்படியாவது கிருபைவைத்து தாங்கள்தான் காப்பாற்ற வேண்டும்.

சங்க:—பிராம்மணோத்தமரே! கவலைவேண்டாம். [பையனைப் பார்த்து, முகத்திலேயே யந்திரம்போட்டு, கையால் தடவி] குழந்தாய்! உன் பெயர் என்ன? ஏன் ஜடம்மாதிரி பேசாமலிருக்கிறாய்?

பையன்:—[ஸ்தோத்திரம் செய்கிறான். எல்லோரும் ஆச்சரியப்படுகிறார்கள். அனுபந்தம் பார்க்க.] குரோ! ஜடத்திற்கு ஒரு சேஷ்டையும் கிடையாதே. அது சுத்த அழியாத வஸ்து. இவைகளெல்லாம் மாயையேயன்றோ!

கிழ:—[நமஸ்கரித்து] சம்போ! மகாதேவா! சுவாமி உண்மை எவ்வாறு தோப்பதென்று எங்களுக்குப் புரியவில்லையே! — அஹஹா! சங்கரா!

சங்க:—சற்றுப்பொறும். இவன் எல்லாவற்றையும் துறந்த பரமஞானி. இவனுக்கு ஒருவிதமான இச்சையும் கிடையாது. இங்கிருந்து செய்யவேண்டிய காரியம் ஒன்றுமில்லை. ஆகையால் நம்முடன் கூடவே இருக்கட்டும். சிஷ்யர்காள்! இவரையும் அழைத்துக் கொள்ளுங்கள். ஹஸ்தாமலகரே! நீர் நம்முடனே வாரும். உள்ளங்கை நெல்லிக்கனி போல் யாவும் உணர்ந்திருப்பதால் இப்பெயர் உமக்கு நாம் வைத்தோம்.

கிழ:—சரி அப்படியே தங்கள் சித்தம்போல். நானும் தங்கள் கூடவேயே வர அனுமதிக்க வேண்டும்.

சங்க—:நாராயண! நாராயண! சிஷ்யர்காள்! நாமும் இப்பூமண்டலம் முழுவதும் திக்விஜயம் செய்து காஞ்சியை சமீபித்துவிட்டோம். பகவத் ஆக்ஞைப்படி சிருங்கேரி, பத்ரி, நேபாளம், சிதம்பரம் இந்த நான்கு க்ஷேத்திரங்களிலும் நான்கு லிங்கங்களையும் பிரதிஷ்டை செய்துவிட்டோம். காஞ்சி செல்வோம் வாருங்கள். [சிஷ்யர்கள் பாடுகிறார்கள்.]

ராகம்: செஞ்சுருட்டி தாளம் மிச்ரசாபு

காலடீ பவ சங்கராத்வைத ரக்ஷகபவதாரக
கால கால க்ருபாநிதே வடமூல வாஸின்தேசிக
மூலகாரண முக்திதாயக பரம ஹம்ஸ ஜகத்குரோ
காலபீதிம் நிவாரய பரமாத்மதத்வம் போதய.

[ஒருவர்பின் ஒருவராக செல்கிறார்கள். கடைசியாக ஸுதன்வாவும், மந்திரியும் பேசிக்கொண்டே வருகிறார்கள்.]

ஸுத:—மந்திரீ! என்ன ஆச்சரியம்! ஒரு வார்த்தை கூடபேசாதிருந்த அந்த பையன் ஆசாரியாளைக் கண்டதும் சாமாரியாக பொழிகின்றான் பார்த்தனையோ?

மந்திரி:—அரசே! இறந்து ஒரு வருஷம் சென்றபின்பு ப்ரார்த்தித்துக்கொண்ட தம்பதிகளுக்கு அவர்களுடைய குழந்தையை, கொல்லூரில் மறுபடியும் வரவழைத்துக் கொடுத்த இந்த மஹானுபாவனுக்கு இது என்ன பிரமாதம்?

ஸுத:—ஆஹா! என்ன மகிமை! என்ன மகிமை! திருப்பதியிலே போட்டாரே அந்த யந்த்ரம் தனாகர்ஷண யந்த்ரம் ஆஹா! தினந்தோறும் எவ்வளவு பணம் வந்து குவிகின்றது.

மந்திரி:—சாக்ஷாத் ஸர்வேச்வரரான இவரால் எந்த காரியம்தான் செய்யமுடியாது. [மெதுவாக ஒருபுறம் போனதும், இரண்டு பிராம்மணர்கள் பேசிக்கொண்டே வருகிறார்கள்.]

1-வது பிராம்:—ஸ்வாமி! என்ன? திருவானைக்காவலில் முன்போல் இப்பொழுது அவ்வளவு கோரமில்லையாமே?

2-வது பிராம்:—சுவாமிகள் என்று வந்து அகிலாண்டேச்வரிக்கு தாடங்கம் பிரதிஷ்டை செய்தார்களோ அன்றுமுதல் அவ்வளவு உபத்திரவம் இல்லை. மூர்த்தி சாந்தமாகிவிட்டது.

1-வது பிராம்:—சற்று இரும். அதோ என்ன பாட்டு சப்தம் யாரிவர்கள் [மூன்று பிராம்மணர்கள் நாமாவளி பாடிக் கொண்டு வருகிறார்கள்.]

மகாதேவா, மகாலிங்கா, மத்யார்ஜுனேசா மாம்பாஹி.

[நாமாவளி முடிந்ததும்]

1-வது பிரா:—சுவாமிகாள், நீங்களெல்லாம் எந்த ஊர். ஏதாவது விசேஷ சமாசாரம் உண்டோ.

3-வது பிரா:—நாங்கள் மத்யார்ஜுன வாசிகள். ராமேச்வரம் போகும்போது சுவாமிகள் எங்கள் ஊர்வழியாக போனார்கள்.

4-வது பிரா:—அடாடா என்ன கூட்டம்! என்ன கூட்டம்! கிட்டத் தட்ட பதினாயிரம் ஜனங்களுக்கு குறைச்சலில்லே.

3-வது பிரா:—ஆசார்யாள் கோவிலில் ஸ்வாமி தரிசனம் செய்து ஒரு ஸ்துதி சொன்னார். ஆஹா! உடனே ஒரு ஜோதி உண்டாயிற்று

4-வது பிரா:—"ஸத்யம் அத்வைதம்" "ஸத்யம் அத்வைதம்" என்று ஆகாயத்திலிருந்து இடிமுழக்கம்போல் அசரீரி உண்டாயிற்று. என்ன ஆச்சர்யம் பார்த்தேளா.

2-வது பிரா:—ஆஹா! ஒவ்வொரு அத்புதத்தையும் கேட்க கேட்க என்ன ஆனந்தம் உண்டாகிறது. சரி வாருங்கள் அவர்கள் கூட செல்வோம். [எல்லோரும் பஜனை]

சம்போ சங்கர கௌரீசா, சிவசாம்பசதாசிவ கௌரீசா
சம்போ சங்கர கௌரீசா, ஹர ஆபத்பாந்தவா — கௌரீசா

[பாடிக்கொண்டே செல்கின்றனர்.]

---

## அங்கம் 5

### காட்சி 5.

[காஞ்சீபுரத்தில் "காமகோடி பீடம்" என்னும் "ஸர்வக்ஞ பீடம்" அழகாக மகா தோரணங்களால் அலங்கரிக்கப்பட்டிருக்கிறது. பக்கத்தில் ஒரு குகை இருக்கிறது. ஆசார்ய சிஷ்யர்கள் ஸ்தோத்தரித்துக்கொண்டிருக்கின்றனர். ராஜஸேனன் (அரசன்) ஆசார்யாளின் பாதுகையை எடுத்துக்கொண்டு முன் வர, பின்னால் ஸ்ரீ சங்கரர் வருகிறார்.]

சங்:—[பீடத்தை அணுகி] பத்ம பாதரே! இந்த பீடத்தில் ஏறினல் தான் ஸர்வ திக்விஜயமும் பூர்த்தியான தாகுமோ!

பத்ம:—ஜகத்குரோ! ஆம். தயை செய்து இதன் மீது தாங்கள் அமர்ந்து அலங்கரிக்கவேண்டும்.

சங்:—நல்லது. [ஆஸனத்திலேறும் பொழுது, ஆகாசத்திலிருந்து] ஹே! சங்கரா! இந்த பீடத்தை யார் ஸர்வக்ஞனே, சுத்தனே, சுசிர் பூதனே, அவன் தான் ஆரோஹணிக்கலாம். இப்பொழுது நீர் ஸர்வக்ஞர் என்பதில் சந்தேகமில்லை. ஆனல் நீர் ஸ்திரீகளோடு விலாஸம் செய்த காரணத்தால் சுசிர்பூதரல்ல என்று ஒரு ஆக்ஷேபமிருக்கிறது. [எல்லோரும் பிரமிக்கின்றனர்.]

சங்:—[கோபத்துடன்] ஹே! வாணீ! உனது கர்வத்தை ஒரு காம் பங்கம் செய்தும் மறுபடியும் இந்த இடையூறு செய்கிறாய் — ஹே! தேவி! நாம் இப்பொழுது எந்த தேகத்துடன் இந்த பீடத்தின் மேல் உட்காரப் போகிறோமோ இது களங்கமற்ற தேகமே. எந்த தேகத்தோடு ஸ்திரீ விலாஸம் செய்தோமோ அது சிதையில் பஸ்மமாகிவிட்டது. சரீர சம்பந்தமாயுள்ள சுத்தாதிகள் கொஞ்சமும் ஆத்மாவுக்கு கிடையாது. இதை நீ அறியாயோ! [ஆகாயத்திலிருந்து] ப்ரபோ! தாங்களே இப்பீடத்திற்கு பூரண அர்ஹதையுடையவர்கள். தங்களுக்கு ஸாஸ்வதி தீனையானுள் என்பது வெளியாகும் பொருட்டே இவ்வாறு செய்தேன். க்ஷமிக்கவேணும்.

[சங்கரர் ஸர்வக்ஞ பீடம் ஏறி உட்காருதல். வாத்ய கோஷமும் புஷ்பமாரியும். ஜயகோஷம். எல்லோரும் பாடுகிறார்கள்.]

ராகம் இந்துஸ்தான் காபி தாளம் ஆதி.

காமகோடி பீடம் வாழுமென்குரோ ஜகத்குரோ
காம லோபதாப மேது மின்றி வாழ் ஜகத்குரோ
ஸோம நாதர் பூஜையே கொள் சந்திரசேகரப்ரபோ
ஜோதியான மேனியோ டிலங்குமா குணப்ரபோ
ஓமதாதியான வேதா (அ)ந்த ஞான வித்தகா
ஊர்கள் தோறு மேவி ஞான செஞ்சொல்லோது மெய்த்தவா
மாமயூர தாயதான கஞ்சி வாழு சக்தி மேல்
மாசிலாது பாட ஏழை பங்கிலே சிறக்கவே.

ஸ்ரீமத் பரம ஹம்ஸ பரிவ்ராஜ காசார்ய ஸ்ரீமத் சங்கர பகவத் பாதாசார்யாளுக்கு ஜே! ஜே! ஜே!

சங்:—நாராயண! நாராயண! சிஷ்யர்காள் நீங்கள் நான்கு திக்குகளிலும் நமது மடங்களில் வசித்துக்கொண்டு சிஷ்ய பாரம் பர்யமாய் நம் அத்வைத ஸாம்பிரதாயத்தை வளர்த்துக் கொண்டு எல்லா ஜனங்களுக்கும் அநுகூலமாக வைதீக மார்க்கத்தைப் பின்பற்றுமாறு செய்யுங்கள் [ராஜஸேனரை நோக்கி] ஹே! பூபதே! மிக்கப் பிரயாசையுடன் இக் காஞ்சீநகரத்தை ஸ்ரீசக்ர உருவமாக அமைத்து, இந்த காமகோடி பீடத்தை மத்தியிலும், மற்றும் சிவன், விஷ்ணு தேவாலயங்களை முறைப் படி அமைத்து பெரும் திருப்பணி கைங்கர்யம் செய்து நற் பேறும் பெற்றீர். உமது மனோரதம் நிறைவேறுமாக.

ராஜ:—ப்ரபோ! தங்கள் கிருபையாலும் ஈசுவரன் அருளாலும் முடிவடைந்ததே தவிர யானாக ஒன்றும் செய்துவிடவில்லை. ஸர்வ சாமர்த்யமும் தங்களுடையதே.

சங்:—"நாராயண!" நீர் நமக்கு ஸஹாயம் செய்து வந்தது போல் நம் சிஷ்யர்களுக்கும் உதவி செய்து வரவேண்டும்.

ராஜ:—தாங்கள் கிருபை செய்து என் ஸேவையை ஏற்றுக்கொண் டீர்கள். — தங்கள் ஆக்ஞை [கூட்டத்தில் இருந்த ஒரு பிரம்சாரி முன் வந்து]

ஸ்ரீசரணன்:— ஹே குருவர்ய! யதியாகிய தாங்கள் எதற்காக ஸ்ரீ திரிபுர ஸுந்தரீ, காமாக்ஷி, ஸ்ரீ வித்யை இவர்களை உபா ஸிக்கிறீர்கள்.

சங்:—அப்பா! பாலா! அருகில்வா! [சமீபத்தில் வருகிறான்] நிஷ்கா மமாக ஸ்ரீ வித்தையின் உபாஸனையின்றி முக்தியடைவது அஸாத்தியம். சித்ரூபியான பர தேவதையே ஞானஸ்வரூபம். இந்த ரகஸியத்தை அறிந்த நீயே எனக்குப்பின் இந்த பீடத் திற்குறியவன். ஸுரேச்வராசார்ய! பத்மபாதரே! நமக்குப் பின் பிரம்மசாரியான இவனே நமது யோக லிங்க பூஜைக் காக இந்த பீடத்தில் இருக்கட்டும். ஸுரேச்வராசார்ய! தாம் எல்லாவற்றையும் கவனித்துக்கொள்ளும். பத்மபாதர் ஜெகன்னாதம் செல்லட்டும். ஹஸ்தாமலகர் பத்ரி செல்லட்

டும். நம்முடைய அவதார பூர்த்தி காலம் நெருங்கிவிட்டது. ["நாராயண" என்று சொல்லிக்கொண்டே இறங்கி காமாக்ஷி தேவியின் ஆஸ்தானத்தின் பக்கத்திலுள்ள குகையில் மறைகிறார்]

எல்லோரும்:—ப்ரபோ! நாங்கள் பரம தன்யர்களானோம். இப்பொழுதே உண்மையறிந்தோம். தர்மத்தை நிலைநாட்ட மானிட ரூபமெடுத்த ஹே சங்கரா! தங்கள் ஸ்வரூப காக்ஷி தந்தருளப் பிரார்த்திக்கிறோம். கிருபை செய்யவேணும்

[பார்வதி, பரமேச்வரர் காக்ஷி கொடுத்தல். வாத்ய கோஷம்]

### கடைசி கோரஸ்.

குரு ஸ்துதி கீதம்

பங்கிம் சந்திர சட்டோபாத்தியாயர் வங்காளியில் இயற்றிய வந்தேமாதரம் கீத வர்ணமெட்டு.

வந்தே ஸத்குரும் — சங்கரம்—

1 ஸரஸிஜநேத்ரம் ஸாது சரித்ரம்
காஷாயாம்பர கருணா லோலம் — வந்தே —
தத்வமார்க்க பரிசீல நிபுணம் —

2 குரு பிரும்மா குரு விஷ்ணு குரு தேவோ மஹேசுவர:
குரு ஸாக்ஷாத் பரம் பிரும்மா தஸ்மை ஸ்ரீகுரவே நம: (வந்தே)

3 முனிவரர் பூசுரர் தேவர்கள் துதிக்கவும்
ஸர்வக்ஞர் என ஸரஸ்வதி பாடவும்,
சாந்தமூர்த்தியே போத ரூபனே—வந்தே

சிஷ்யர்கள்:— நம: பார்வதீபதயே

எல்லோரும்:—ஹர ஹர மகாதேவா.

மங்களம்! மங்களம்!! மங்களம்!!!



பாரதி பிரஸ், மன்னார்குடி.